சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்



"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்

செப்டம்பர் & அக்டோபர் - 2024
மலர் 45 இதழ் 9 & 10
வருடச் சந்தா ரூ. 150.00
தனிப்பிரதி ரூ.20.00

## ஜெபமாலையால் விளையும் நன்மைகள்

நம் பாவங்களைக் கழுவி நம் ஆன்மாவைத் தூய்மையாக்குகிறது.
சேசு கிறீஸ்துவைப் பற்றிய உண்மையை நமக்கு கொஞ்சம் கொஞ்சமாக உணர்த்துகிறது.
நம் எல்லா எதிரிகள்மீதும் (உலகம், பசாசு, சரீரம்) வெற்றி அளிக்கிறது.

# நமதாண்டவரை முழு அன்புடன் நேசித்து ஆறுதலளிக்க அநேக அர்ச். குழந்தை தெரேசாள்(கள்) தேவை!

திருச்சபையையும், உலகத்தையும், நம் ஆத்துமங்களையும் காப்பாற்ற ஜெபமும், தவமும், பரிகாரமும் எவ்வளவு அவசியமோ, அதே அளவுக்கு அர்ச்சியசிஷ்டதனமுள்ள, பலியாகும் அன்பின் ஆன்மாக்களும் அவசியம்.

இந்தியாவுக்கு வந்து, அநேக ஆன்மாக்களை ஆண்டவரின் பாதத்தில் சேர்த்து விட வேண்டுமென்ற ஆன்ம தாகத்தால் பற்றியெரிந்த அர்ச். சவேரியார்(கள்) இந்நாட்களில் மிகவும் தேவை. ஒவ்வொரு ஆன்மாவும் கடவுளால் ஒரு மிகப் பெரும் சொத்தைப் போல மதிக்கப்படுகிறது. அஞ்ஞான ஆன்மாக்களை மனந்திருப்பவும், மனந்திரும்பிய கத்தோலிக்க மக்களை வழிநடத்தவும், பரிசுத்தமான ஆன்ம தாகமுள்ள அநேக குருக்கள் இக்காலத்தில் மிக அதிகம் தேவை.

அதே போன்று, திருச்சபையில் குழப்பம் அதிகரிக்கும் எல்லாக் காலங்களிலும் ஆண்டவரால் அர்ச்சியசிஷ்டவர்கள் எழுப்பப்பட்டது போல, நாம் வாழும் இந்த நூற்றாண்டிலும் அன்பின் சிறிய வழிகளில் நமதாண்டவரை நேசித்து, அதன் மூலம் ஆன்மாக்களை மீட்க, அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாளைப் போன்று இன்று அநேகர் தேவைப்படுகிறார்கள். தனக்கு வந்த துன்பங்களை அவள் பொறுமையோடு ஏற்றுக்கொண்டு, சிறு வயதிலேயே அநேக பரித்தியாகங்கள் செய்து, நமதாண்டவருக்கு அவற்றை ஒப்புக்கொடுத்தது எல்லாமே நமதாண்டவரின் பேரில் அவள் எவ்வளவு மேலான அன்பு வைத்திருந்தாள் என்பதை நமக்குக் காட்டுகிறது.

“தேவ அழைத்தல் பெற்று, இந்த (கார்மெல்) மடத்தில் வாழ நேர்ந்ததை நினைத்து நான் ஒருபோதும், ஒரு முறை கூட வருத்தப்பட்டதேயில்லை” என்று அவள் கூறுகிறாள். ஆனால் இன்றைய காலத்தின் நவீன சூழ்நிலையில், துறவற மடங்களில் வாழும் கன்னியர்கள், “நான் ஏன்தான் துறவறத்திற்கு வந்தேன்? உலக வாழ்க்கையில் நான் சந்தோஷமாக இருந்திருப்பேனே!” என்று துறவற வாழ்வின் அர்த்தம் புரியாமல் புலம்பித் தவிக்கிறார்கள். (உலகத்தில் குடும்பங்களில் வாழும் பெரும்பான்மையினர், இங்கு எவ்வளவு அதிகமான பிரச்சினைகளையும், கஷ்டங்களையும் எதிர்கொள்கிறார்கள் என்பதை இவர்கள் அறிவதில்லை!)

நமதாண்டவரின் அன்பை அறியாத தங்கள் அறியாமையையும், துறவற வாழ்வின் இனிமையையும் அவர்கள் (குருக்களும் கூட) உணராமல் போகிறார்கள். இவர்கள் அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாளையும், அவள் கற்பித்த சிறிய வழியையும் ஆழ்ந்து அறிந்துகொண்டு, அவளைக் கண்டுபாவித்து நடக்க முயற்சி செய்ய வேண்டும். அவளது ஆழ்ந்த விசுவாசமும், ஆண்டவர் பேரில் அவள் வைத்திருந்த நம்பிக்கையும், அவளது உண்மையான நேசமும், துன்பத்தில் அவள் காட்டிய பொறுமையும், ஆன்மாக்களை மீட்க அவள் கொண்டிருந்த தாகமும், அவளிடமிருந்த புண்ணியங்கள் அனைத்தும், துறவறக் கன்னியர்களுக்கு மிகச் சிறந்த முன்மாதிரிகைகளாக இருக்கின்றன.

குருக்களும், துறவற மடங்களில் வாழும் துறவியரும், கன்னியரும் ஆண்டவர் மட்டுமே தரக்கூடிய ஆன்ம மகிழ்ச்சியைத் தங்கள் பரிசுத்த வாழ்வின் மூலம் சுவைப்பார்கள் என்றால், இவ்வுலக வாழ்வை விட துறவற வாழ்வே அதிக இன்பமானது என்றும், அந்த மகிழ்ச்சி வெளி உலகில் இல்லை என்பதையும் அவர்கள் உணர்ந்துகொள்வார்கள். *மரியாயே வாழ்க!*

# உன்னத சர்வேசுரனாகிய சேசுநாதர்

*வரலாற்றில் அனைவரிலும் உயர்ந்த மனிதர்: சேசுநாதர்!*

அவருக்கு ஊழியர்கள் இருக்கவில்லை, ஆனால் மனிதர்கள் அவரை ஆண்டவர் என்று அழைத்தார்கள். அவர் பல்கலைக்கழகங்களுக்கும், கல்லூரி களுக்கும் செல்லவில்லை, என்றாலும் மக்கள் அவரைப் போதகர் என்றழைத்தார்கள். அவரிடம் மருந்துகள் இருக்கவில்லை என்றாலும் மக்கள் அவரைக் குணமளிப் பவர் என்றார்கள். அவரிடம் படை பலம் இருக்கவில்லை, என்றாலும் அரசர்களும் கூட அவருடைய திருப்பெயருக்கு அஞ்சினார்கள். அவர் எந்த ஓர் உலகத்தன்மையான போரையும் நடத்தவில்லை, ஆனால் அவர் உலகத்தை வெற்றி கொண்டார். அவர் அரண்மனையிலும், கோட்டையிலும் வாழவில்லை, எந்த நாட்டின் மீதும் அரசாளவில்லை. ஆனாலும் அவர்கள் அவரை அரசராக மதித்து வணங்கினார்கள். அவர் எந்தக் குற்றத்தையும் செய்யவில்லை, ஆயினும் அவர் சிலுவையில் அறையப்பட்டார்.



அவர் ஒரு கல்லறையில் அடக்கப்பட்டார்; ஆயினும் இன்றும் அவர் உயிர் வாழ்கிறார்; அவருடைய இராச்சியம் இவ்வுலகைச் சார்ந்ததல்ல. ஆயினும் அவரை விசுவசிப்பவர்களின் இருதயங்களில் அது வாழ்கிறது. அவர் அன்பையும், மன்னிப்பையும் பற்றிப் போதித்தார், அவருடைய வார்த்தைகள் கோடிக்கணக்கானவர்களை மனந்திருப்பின. உலக வல்லமை அல்லது உலக அதிகாரம் எதையும் அவர் வாக்களிக்கவில்லை, என்றாலும் பலமற்றவர்கள் அவருடைய நாமத்தில் பலமுள்ளவர்களானார்கள். எழுதப்பட்ட வார்த்தை எதையும் அவர் விட்டுச் செல்லவில்லை, என்றாலும், அவருடைய செய்திகள் எண்ணற்ற பக்கங்களை நிரப்பி யிருக்கின்றன.

அவருடைய பலவீனத்தில் நாம் நம் பலத்தைக் கண்டடைகிறோம்; அவருடைய துன்பத்தில் நம் இரட்சிப்பைக் காண்கிறோம்; உலக செல்வம் எதையும் அவர் வாக்களிக்கவில்லை, இருந்தாலும் நாம் நம் வாழ்வின் பொக்கிஷமாக அவரை மதிக்கிறோம். செல்வங்களையும், இவ்வுலகில் துன்பமேயில்லாத மகிழ்ச்சியையும் அவர் வாக்களிக்கவில்லை. அதற்கு நேர்மாறாக, "உலகில் உங்களுக்கு நெருக்கிடை உண்டாகும்" என்றார் (அரு.16:33)! தம்மைப் பின்செல்பவன் தன்னை மறுத்துத் தன் சிலுவையை நாள்தோறும் சுமந்துகொண்டு என்னைப் பின்செல்லக் கடவான் என்றார். அவரும் கூட தலை சாய்க்கவும் இடமின்றி இருந்தார்.

**அவர் பேசுவதைக் கேள்:** "ஏன் துன்பங்களைக் கண்டு அஞ்சுகிறாய்? நாம் ஆண்டவர் அல்லவா? ஆயினும் உன் பொருட்டு, வறுமை, பசி, தாகம், உடல் சோர்வு, கண்ணீர், ஏக்கம், இரத்த வியர்வை, கொடூரமுள்ள கசையடிகள், முள்முடி, சிலுவைப் பாதையின் துன்பங்கள், இறுதியாக, சிலுவை, ஆணிகள், மூன்று மணி நேரம் மனித புத்திக்கெட்டாத மகா கொடிய வாதை, நித்தியமும் ஒரு கணமும் நாம் பிரிந்திராத நம் பிதாவைப் பிரிந்து நாம் அனுபவித்த நரக வேதனை, இறுதியாக, மரணம் இவை அனைத்தையும் நாம் அனுபவிக்கவில்லையா? நாம் அனுபவித்த இந்த எல்லா வேதனைகளையும், உனக்கு மாதாவாக நாம் தந்தருளிய நம் திவ்ய மாதா

*தன் ஆத்துமத்திலும், தன் இருதயத்திலும் அனுபவிக்கவில்லையா? அது அவர்களுடைய மாசு மறுவற்ற திரு இருதயத்தை வியாகுல வாளால் துளைக்கவில்லையா?*

*நம்மீது கொண்ட விசுவாசத்திற்காக எத்தனை எண்ணற்ற மனிதர்கள் இரத்தஞ்சிந்தி மரித்தார்கள் என்று நீ அறிந்திருக்கிறாய் அல்லவா? நம் அன்பிற்காக அவர்கள் காட்டு மிருகங் களின் கொடூர பற்களுக்கும், வாளுக்கும், ஈட்டிக்கும், கொதிக்கும் எண்ணெய்க்கும், உயிரோடு தோல் உரிக்கப்படும் வேதனைக்கும், சகல அசுத்தங்களும் நிறைந்த நிலவறைச் சிறைகளுக்கும், நெருப்பினால் பழுக்கச் சிவந்த இரும்புப் பாளங்களுக்கும் தங்களைக் கையளிக்கவில்லையா? நெருப்பு மயமான கந்தக ஆவிகளை வெளியேற்றிக்கொண்டிருந்த எரிமலைகளின் வாயின் மீது தலைகீழாகக் கட்டித் தொங்க விடப்படவில்லையா?*

*ஆனால் இப்போது நாமும், நம் திருத்தாயாரும், நம்மைத் தங்கள் உயிரைக் கொண்டு நேசித்த வேதசாட்சிகளும், மற்ற சகல அர்ச்சியசிஷ்டவர்களும் எங்கே இருக்கிறோம் என்று பார்! இது பரலோகம்! இது நித்திய ஜீவியம்! இது சகல பேரின்பங்களுடையவும் பெருங்கடல்! நீ நம்மாலும், நம்முடைய பரிசுத்த மாதாவாலும், உன்னை முடிந்த வரை அதிகமாக நேசிப்பவர் களாகிய சம்மனசுக்களாலும், அர்ச்சியசிஷ்டவர்களாலும் சூழப்பட்டிருக்கிறாய்! இங்கே இனி துன்பமில்லை, கண்ணீர் இல்லை, வலிகள் இல்லை, எதிர்காலத்தைப் பற்றிய அச்சமில்லை. மாறாக, சகல விதமான பரிசுத்த இன்பங்களும், நீ கற்பனை செய்யக் கூடிய எல்லா வகையான சமாதானமும், சந்தோஷமும், நிம்மதியும் இங்கே நிறைந்திருக்கின்றன. இவை ஒரு நாளும் முடியப் போவதில்லை, இவை ஒரு நாளும் அலுத்துப்போவதுமில்லை. ஏனெனில் ஒவ்வொரு நாளும் இந்த இன்பங்கள் உனக்குப் புதிதாய் இருக்கும்!*

*இன்னும் சிறிது காலம்தான் என் மகனே! துன்பங்களைக் கண்டு கலங்காதே, அவை பரலோகத் திற்கு நீ ஏறி வரும்படி நாம் கட்டி வைத்துள்ள படிக்கட்டுகள். உலகில் முதன்முதலில் துன்பம் எப்போது உண்டானது என்பதைச் சிந்தித்துப் பார்.* **எப்போது நரகம் உலகில் ஏவாளின் வழியாகப் பாவத்தை அறிமுகப்படுத்தியதோ, அதே கணத்தில் பரலோகம் உலகில் அதற்கு மாற்று மருந்தாகத் துன்பத்தை அறிமுகப்படுத்தியது.** *நீ பாவத்தின்மீது வெற்றிகொண்டு, நம்மிடம் வந்து சேர உண்மை யாகவே விரும்புவாய் என்றால், துன்பமாகிய இந்த மாற்றுமருந்தை நீ உட்கொண்டுதான் ஆக வேண்டும்.*

*ஆகவே, அஞ்சாதே. துன்பத்தைக் கண்டு நடுங்காதே. ஏனெனில் நீ பரிசுத்தனாயிருக்கும் போது, நாம் உனக்குத் தருகிற, சகல பரலோக இன்பங்களும் நிறைந்த ஆத்தும சமாதானத்தை எந்தத் துன்பத்தாலும் அழித்து விட முடியாது. உன் ஆண்டவராகிய நமது இரத்தந் தோய்ந்த பாதச் சுவடுகளை நீ பின்பற்றி வர நேர்ந்தால், அதற்காக அகமகிழ்ந்து களிகூர்வாயாக, ஏனெனில் இந்தப் பாதையின் முடிவில், இனி ஒருபோதும் முடிவடையாத நித்தியப் பேரின்பத்தை நீ காண்பாய். இன்னும் சிறிது காலம்தான். எதற்கும் அஞ்சாதே, நாம் உன்னோடு இருக்கிறோம்.''*

*ஆம்! நம் ஆண்டவர் நம்மோடிருக்கிறார்! நாம் பயப்பட எந்தக் காரணமுமில்லை. துன்பம் எவ்வளவு பெரிதாயிருந்தாலும், அதுவும் கடந்து போவதை நாம் காண்போம். ஒரு நாளும் கடந்து போகாத பரலோகப் பேரின்பம் மட்டுமே நிலையானது, நம் நேசத்திற்குரியது.*

*கடவுளும், மனிதருமானவர், தம்மையும், நம் அயலானையும் அறிந்து, நேசித்து, ஊழியம் செய்து, இவ்வாறு நித்திய ஜீவியத்தை அடைந்துகொள்ள நம்மை அழைக்கிறார். அவருடைய திருநாமம் வாழ்த்தப்படக் கடவது!*

## Adveniat Regnum Tuum

# உம்முடைய இராச்சியம் வருக!

**ஆண்டவர் என்றென்றைக்கும் இராஜாவாக வீற்றிருப்பார்; ஆண்டவர் தமது பிரஜைகளுக்குச் சமாதானத்தைக் கொடுத்து ஆசீர்வதிப்பார்** *(சங்.28:10-11).*

**உலகத் தீமைகளுக்கான காரணம்**



உலகத்தில் இன்று மனுக்குலம் அனுபவித்துக்கொண்டிருக்கும் துன்பங்களுக்கு முக்கிய காரணம், பெரும்பான்மையான மனிதர்கள் சேசுக்கிறீஸ்துவையும், அவரது பரிசுத்த கற்பனைகளையும் சட்டங்களையும் தங்கள் வாழ்விலிருந்து அகற்றி விட்டதேயாகும்! ஆகையால், நமதாண்டவருக்கும், அவரது சட்டங்களுக்கும், மனிதர்களின் தனிப்பட்ட மற்றும் பொது வாழ்விலும் எந்த இடமும் இல்லாமல் போய்விட்டது. தனி மனிதனும், நாடுகளும் நமது இரட்சகருடைய அரசாட்சிக்குத் தங்களைக் கீழ்ப்படுத்தாத வரையிலும், மனிதரிடமும், உலக நாடுகளிடையேயும், நீடித்த சமாதானம் நிலவும் என நாம் நம்ப இயலாது. மனிதர்கள் கிறீஸ்துவின் சமாதானத்தை "கிறீஸ்துவின் இராச்சியத்தில்தான் தேட வேண்டும்" (Pax Christi Regna Christi) சமாதானத்தைத் திரும்பக் கொண்டு வருவதற்கு, அதை உறுதியாகக் கட்டி எழுப்புவதற்கு நமதாண்டவரின் இராச்சியத்தைத் திரும்பக் கொண்டு வருவதைத் தவிர வேறு வழி இல்லை.

இந்த இராச்சியத்தைத் திரும்பக் கொண்டு வரும் முயற்சிகளில் ஒன்று: கிறீஸ்து அரசரின் மகிமைக்காக திருநாள் கொண்டாடி அவரது அரசு பற்றி விசுவாசிகளுக்கு எடுத்துக் கூறுவதாகும்.

**கிறீஸ்துவின் இராஜரீகம் பறைசாற்றப்படுகிறது:**

சேசுவுக்கு அனைத்து சிருஷ்டிகளுக்கும் மேலான மிக உந்நதமான உத்தமதனத்தை உருவகப்படுத்த, "**இராஜா**" என்ற பட்டம் சூட்டுவது நீண்ட காலமாக இருந்து வரும் வழக்கமாகும். அவர் தமது அளவற்ற புத்திக்கூர்மையினாலும், ஞானத்தின் விசாலத்தாலும் சகலரின் இருதயங்களையும் ஆட்சி செய்கிறார். மேலும் அவரே "**சத்தியமாக**" இருப்பதால், அவரிடமிருந்து மனிதர்கள் தாழ்ச்சியோடு சத்தியங்களைப் பெற்றுக்கொள்ள வேண்டும். அவர் தமது வரப்பிரசாதத்தாலும், தூண்டுதல்களினாலும் நம் மனச் சுதந்திரத்தை உயர்வான செயல்களைச் செய்வதற்கு அழைப்பதாலும், தமது சிநேகத்தினாலும் நமது சித்தத்தை ஆட்சி செய்கிறார்.

**வேதாகமத்தில் கிறீஸ்து அரசர் பற்றிய குறிப்புகள்!**

கிறீஸ்துநாதர் அரசராக இருக்கிறார் என்பது வேதாகமத்தில் அநேக இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றில் சிலவற்றை இங்கே காண்போம்:

*(1)* "ஆண்டவரான சர்வேசுரன் அவருடைய தந்தையாகிய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குத் தந்தருளுவார்; ஆதலால் அவர் யாக்கோபின் கோத்திரத்தில் என்றென்றும் அரசாளுவார்; அவருடைய அரசாட்சிக்கு முடிவு இராது" (லூக். *1:32-33).*

*(2)* "தேவனே! உமது சிங்காசனம் என்றென்றைக்குமுள்ளது; உமது இராச்சியத்தின் செங்கோல் நேர்மையான செங்கோலாம்" (சங். *44:7).*

வேதாகமங்களில் தீர்க்கதரிசிகள் சேசுகிறீஸ்துவின் அரச தன்மைக்குச் சான்று பகர்வதையும் காண்போம்: "ஏனெனில் ஒரு பாலன் நமக்காகப் பிறந்தார். சுதன் நமக்கு அளிக்கப்பட்டார்; அவர் தம் தோள்மீது தமது அரசாட்சியின் அடையாளத்தைக் கொண்டிருப்பார்..." (இசை. 9:6).

வேதாகமங்களின் பொதுப் போதனையை முன்னிட்டு, இவ்வுலகில் கிறீஸ்துவின் இராச்சிய மாகத் திகழும் கத்தோலிக்கத் திருச்சபை, தன்னை ஸ்தாபித்தவரை எல்லா வகையிலும் வணங்கி, திருவழிபாட்டில் இராஜாதி இராஜனாக ஆராதிப்பது மெய்யாகவே நீதியாகும்.

**கிறீஸ்து இரண்டு வகைகளில் அரசராக இருக்கிறார்!**

*1.* **இயல்பால் அரசர்**: அர்ச். அலெக்ஸாந்திரியா சிரில் கூறுகிறபடி, "கிறீஸ்து சகல படைப்பு களின் மேலும் அதிகாரமுள்ளவராக இருக்கிறார். பலவந்தத்தினாலோ, அநியாயமாகவோ அன்றி, தம் தேவ சுபாவத்தால் அவர் இந்த அதிகாரத்தைக் கொண்டிருக்கிறார்." அவரது இராஜரீகம் அவரது தேவ-மானிட ஒன்றிப்பில் (Hypostatic Union) ஊன்றியிருக்கிறது. ஆகவே கிறீஸ்து, கடவுள் என்ற முறையில் சகல சம்மனசுக்களாலும் மானிடர்களாலும் ஆராதிக்கப்பட வேண்டியது மட்டுமின்றி, மனிதன் என்ற முறையிலும் அவருக்கு சம்மனசுக்களும் பணிந்து ஊழியம் செய்து அவரது இராச்சியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

*2.* **இரட்சகர் என்பதால் அரசர்**: கிறீஸ்து நம் இரட்சகர் என்ற முறையிலும் நமது இராஜாவா யிருக்கிறார். அழிந்துபோகும் பொருட்களால் அவர் நம்மை மீட்கவில்லை. மாறாக, தம் சொந்த விலைமதிப்பில்லா இரத்தத்தால் நம்மை இரட்சித்தார்! நம்மை பெரும் விலை கொடுத்து அவர் வாங்கியிருப்பதால், நாம் நமக்கு அல்ல, மாறாக கிறீஸ்துவுக்கே அவயவங்களாயிருக்கிறோம்.

கிறீஸ்துவின் இராஜரீகம் அரசத்துவத்தின் மூன்று முக்கிய அம்சங்களிலான அதிகாரத்தைக் கொண்டிருத்தலில் அடங்கியிருக்கிறது. மேலே குறிப்பிட்ட வேதாகமச் சான்றுகளும் இதைத் தான் வெளிப்படுத்துகின்றன. கிறீஸ்து மனிதர்களுக்கு இரட்சகராக மட்டுமின்றி, சட்டம் பிறப்பிப்பவராகவும் இருக்கிறார் என்பது விசுவாச சத்தியம். வேதப் பிரமாணத்தைக் கொடுத்த வரும், நடுத்தீர்க்கிறவரும், ஒருவரே. அவரே அழிக்கவும், இரட்சிக்கவும் வல்லவர்" (யாக. 4:12). இவ்வுரிமையில் சன்மானம் அளிக்கும் அதிகாரமும் தண்டனை வழங்கும் அதிகாரமும் அடங்கும். இதைத் தவிர, இயற்றிய சட்டத்தை, வழங்கிய தீர்ப்பைச் செயல்படுத்தும் அதிகாரத்தையும் சேசுநாதர் கொண்டிருக்கிறார். ஆகவே அனைவரும் அவருடைய கட்டளை களைக் கடைப்பிடித்து, அவருக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

நமதாண்டவரின் இராச்சியம் **ஞான இராச்சியமாகும்**. இதனால்தான், அப்போஸ்தலர்களும், யூதர்களும் மெசையா இஸ்ராயேல் மக்களின் சுதந்திர இராச்சியத்தை மீட்க அரசராக வருவார் என்ற தங்கள் எண்ணத்தை அநேக முறை வெளிப்படுத்தியபோது, அவைகளை மறுத்து, ஒதுக்கி வந்தார். மக்கள்கூட்டம் அவரைப் பிடித்து அரசராக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு தம்மை நெருங்குவதை அறிந்து, அவர்களை விட்டு விலகி மறைந்தார். உரோமை ஆளுனனிடம் தம் இராச்சியம் இவ்வுலகைச் சார்ந்தது அல்ல என்று அறிக்கையிட்டார். மனிதர்கள் இந்த இராச் சியத்தில் நுழைய பிரயாசைப்பட வேண்டுமென சுவிசேஷங்கள் கூறுகின்றன. ஞானஸ்நானத் தினால் மட்டுமே புதுப்பிறப்பு அடைந்து, அதனுள் நுழைய முடியும். சாத்தானின் இருள் இராச் சியத்தைத் தவிர வேறு எந்த இராச்சியத்தையும் கிறீஸ்துவின் இராச்சியம் எதிர்த்து நிற்பதில்லை.

எனவே, சேசுக்கிறீஸ்துவின் இராச்சியம் ஒவ்வொரு மனிதரிடத்திலும் மலர வேண்டுமென் றும், நமது ஆன்மாவில் அவரே அரசராக இருக்க வேண்டுமென்றும் ஆசித்து, அதற்காக மன்றாடுவோமாக.

**கிறீஸ்து அரசரே, உமது இராச்சியம் வருக!** மரியாயே வாழ்க!

## ஒலிம்பிக் 2024 தொடக்க விழாவில் நடந்த தேவ நிந்தைகளுக்குப் பரிகாரமாக

# சேசுவின் திரு இருதயத்திற்கு நிந்தைப் பரிகாரம் செய்வோம்!

*சமீபத்தில் பிரான்ஸில் நடந்து முடிந்த 2024 ஒலிம்பிக் தொடக்க விழாவில் ஏராள மான, மிக அருவருப்பான தேவ நிந்தைகள் நிகழ்த்தப்பட்டன. அரைகுறை ஆடைகள் அணிந்த பெண்கள் டா வின்சியின் இராப் போஜனக் காட்சியை அப்படியே சித்தரித்துக் காட்டினார்கள். திவ்ய நற்கருணையும், திவ்ய பலிபூசையும், இன்னும் பல தெய்வீகக் காரியங்களும் அவசங்கைப்படுத்தப்பட்டன. சேசு, மரியாயின் அன்புப் பிள்ளைகளாகிய நாம் ஏற்கெனவே நொந்து போயிருக்கும் அவர்கள் இருவருக்கும் முழு அன்போடு பரிகாரம் செய்து ஆறுதல் அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். பின்வரும் ஜெபத்தைப் பயன்படுத்தியும், தங்களால் முடிந்த பரிகாரச் செயல்களாலும் இந்தப் பரிகாரத்தைச் செய்ய முன்வரும்படி உங்களை அழைக்கிறோம்.*

### சேசுவின் திரு இருதயத்திற்கு நிந்தைப் பரிகார ஜெபம்

**சேசுவின் திரு இருதயமே, தேவரீருக்கு இடைவிடாமல் செய்யப்படுகிற நிந்தை அவமானங்களுக்குப் பரிகாரம் செய்யும் ஆசையால் தூண்டப்பட்டு, அடியோர் தேவரீருடைய இரக்கத்தின் சிம்மாசனத்திற்கு முன்பாக சாஷ்டாங்கமாக விழுந்து, மனுக்குலம் முழுவதின் பெயராலும் எங்கள் அன்பையும் பிரமாணிக்கத் தையும் உமக்கு வாக்களிக்கிறோம். உமது பரம இரகசியங்கள் எவ்வளவு அதிகமாகத் தூஷணிக்கப்படுகிறதோ, அவ்வளவு அதிகமாக, ஓ சேசுவின் திவ்ய இருதயமே, நாங்கள் அவற்றை உறுதியாக விசுவசிக்கிறோம். அவபக்தி யானது அழியாமை பற்றிய எங்கள் நம்பிக்கையை அணைத்து விட எவ்வளவு அதிகமாக முயல்கிறதோ, அவ்வளவு அதிகமாக மனுக்குலத்தின் ஏக நம்பிக்கையான உமது திரு இருதயத்தில் நாங்கள் நம்பிக்கை வைக்கிறோம். அவிசுவாசம் எவ்வளவு அதிகமாக உமது தெய்வீகத்தைத் தாக்குகிறதோ, அவ்வளவு அதிகத் தாழ்ச்சியோடும், ஆழ்ந்த விதமாகவும், ஓ சேசுவின் திவ்ய இருதயமே, அதை நாங்கள் ஆராதிக்கிறோம். உம்முடைய திருச்சட்டங்கள் எவ்வளவு அதிகமாக மீறப்பட்டு அசட்டை செய்யப்படுகின்றனவோ, அவ்வளவு அதிகமாக, ஓ சேசுவின் மகா பரிசுத்த திரு இருதயமே, அவற்றை அனுசரிப்பதில் நாங்கள் மகிழ்ச்சியடைவோம்! உம்முடைய தேவத் திரவிய அனுமானங்கள் எவ்வளவு அதிகமாகப் புறக்கணிக்கப்பட்டுக் கைவிடப்படுகின் றனவோ, அவ்வளவு அடிக்கடி சேசுவின் மகா தாராளமுள்ள திரு இருதயமே, நாங்கள் அன்போடும், வணக்கத் தோடும் அவற்றைப் பெற்றுக்கொள்வோம். உம்முடைய புண்ணியங்கள் கண்டு பாவிக்கப்படுவது எவ்வளவு அதிகமாக அலட்சியம் செய்யப்பட்டு, மறக்கப்படுகிறதோ, அவ்வளவு அதிகமாக, ஓ புண்ணியங்கள் அனைத் திற்கும் மாதிரிகையாகிய திரு இருதயமே, நாங்கள் அவற்றை அனுசரிக்கப் பிரயாசைப்படுவோம். பசாசு ஆத்துமங்களை அழிக்கிறதற்கு எவ்வளவு அதிகமாக உழைக்கிறதோ, அவ்வளவு அதிகமாக, ஓ ஆத்துமங் களின் மீது தாகமுள்ள நேசராகிய சேசுவின் திரு இருதயமே, அவற்றை இரட்சிக்கும் ஆசையால் நாங்கள் பற்றியெரிவோம். பாவமும், அசுத்தத்தனமும் எவ்வளவு அதிகமாக மனிதனில் உள்ள தேவ சாயலை அழிக் கிறதோ, அவ்வளவு அதிகமாக, ஓ சேசுவின் திரு இருதயமே, மாசற்ற ஜீவியத்தின் வழியாக இஸ்பிரீத்து சாந்துவானவரின் உயிருள்ள தேவாலயமாக இருக்க நாங்கள் பாடுபடுவோம்! பரிசுத்த திருச்சபை எவ்வளவு அதிகமாகப் புறக்கணிக்கப்படுகிறதோ, அவ்வளவு அதிகமாக, ஓ சேசுவின் மகா மதுரமுள்ள திரு இருதயமே, அதன் பிரமாணிக்கமுள்ள பிள்ளைகளாக இருக்க நாங்கள் பிரயாசைப்படுவோம். பூலோகத்தில் உமது பிரதிநிதியாய் இருக்கிறவர் எவ்வளவு அதிகமாகத் துன்புறுத்தப்படுகிறாரோ, அவ்வளவு அதிகமாக, ஓ சேசுவின் இராஜரீகமுள்ள திரு இருதயமே, உம்முடைய பரிசுத்த திருச்சபையின் தவறாத சிரசாக அவரை நாங்கள் மதித்து வணங்கி, அவருக்குப் பிரமாணிக்கமாயிருந்து அவருக்காக ஜெபிப்போம். சேசுவின் திரு இருதயமே, உம் வல்லமையுள்ள வரப்பிரசாதத்தின் வழியாக, கெட்டுப் போயிருக்கிற உலகின் மத்தியில் நாங்கள் உம் அப்போஸ்தலர்களாகவும், பரலோக இராச்சியத்தில் உமது மகிமையின் முடியாகவும் ஆவோமாக. ஆமென்.**

# அறிந்துகொள்வோம் பாத்திமா செய்தியை!

## சம்மனசானவரின் காட்சிகள் - தொடர்ச்சி - III

**உம்மை விசுவசியாதவர்களுக்காகவும்:** *"காணாமலே விசுவசிக்கிறவர்கள் பாக்கியவான்கள்."* ஏனெனில் தேவ வார்த்தையின் அடிப்படையில், காணாததை விசுவசிப்பதே மெய்யான விசுவாசம். ஆனால் இன்று, ஞான மேய்ப்பர்களாலும் கூட மறுதலிக்கப்படாத சத்தியம் ஏதுமில்லை. பாத்திமா தூதர் அறிவித்த "பிதா, சுதன், இஸ்பிரீத்துசாந்து" என்னும் தமத்திரித்துவ சத்தியம், அவர் ஏந்தி வந்த திவ்ய நற்கருணை, முதல் சனி பக்தியின் நிபந்தனைகளாக தேவமாதா கேட்டுக் கொண்ட பாவசங்கீர்த்தனம், திவ்ய நன்மை, ஜெபம், குறிப்பாக ஜெபமாலை, தேவ இரகசியங்களின்மீதான தியானம், தனது மூன்றாம் காட்சியில் தேவமாதா குழந்தைகளுக்குத் திறந்து காட்டிய நரகம், அமெலியா இருக்கும் உத்தரிக்கிற ஸ்தலம், முதல் சனி பக்தியின் நோக்கமான மனித இரட்சணியம் என்பவை போன்ற, பாத்திமாவில் மிக உறுதியாக மீண்டும் ஸ்தாபிக்கப்பட்ட சகல சத்தியங்களும் இன்று "சங்கச் சபையில்" சர்வ சாதாரணமாக மறுதலிக்கப்படுகின்றன. குறிப்பாக, திருச்சபையின் தலைமை பீடத்தாலேயே நரக சத்தியம் மறுதலிக்கப்பட்டுள்ளதால், தேவ திருச்சுதனின் மனிதாவதாரம், சேசுநாதரின் ஜீவியம், திருப் பாடுகள், திருமரணம், அவற்றின் வழியாக வரும் மனித இரட்சணியம் ஆகிய அனைத்துமே இன்று "தேவையற்றவை"யாகி விட்டன.



"சகலத்தையும் காண்கிறவர்களாகிய" தேவமாதா இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிகழ இருந்த இந்த விசுவாச மறுதலிப்பைப் பற்றியே தனது தூதர் வழியாக, கடவுளை "விசுவசித்து," "அவரை விசுவசியாதவர்களுக்காக" மன்னிப்பைக் கேட்கும்படி, அனைத்தையும் விசுவசித்து, நம்பி, ஏற்றுக்கொள்கிற தனது "பாலர்களிடம்" கேட்டுக்கொண்டார்கள். எனவே, "பாலனாயிருக்கிற எவனும் தேவமாதாவிடம் வந்து" (பழ. 9:4), சேசுவும், மாதாவும், பரிசுத்த சத்தியத் திருச்சபையும் கற்பிக்கும் அனைத்தையும் கபடற்ற மனதோடும், தெய்வீகச் சார்புடைமையோடும் ஏற்றுக்கொண்டு, தேவமாதாவின் அன்பின் அடிமையாயிருந்து தானும் கடவுளை விசுவசித்து, அவரை விசுவசியாத வர்களுக்காக மன்னிப்பை மன்றாடி, மீண்டும் திருச்சபையில் கத்தோலிக்க விசுவாசம் தழைத் தோங்க ஒத்துழைப்பானாக. விசுவாசம் புதுப்பிக்கப்பட வேறு வழி நமக்குத் தரப்படவில்லை!

**"உம்மை ஆராதியாதவர்களுக்காகவும்":** தமத்திரித்துவ சர்வேசுரனுக்குத் தகுதியுள்ள, மெய்யான ஆராதனை செலுத்துபவர் நம் ஆண்டவராகிய சேசுக்கிறீஸ்துநாதர் மட்டுமே. அவர் வழியாக அல்லாமல், அளவற்றவராகிய சர்வேசுரனுக்குத் தகுதியுள்ள ஆராதனை செலுத்துவது ஒன்றுமில்லாமையாக இருக்கிற மனிதனுக்கு சாத்தியமேயில்லை. **மிகப் பரிசுத்த திருச்சிலுவைப் பலியும், அதன் தொடர்ச்சியாகவும், புதுப்பித்தலாகவும் இருக்கிற திவ்ய பூசைப் பலியுமே மெய்யான, தமத்திரித்துவ சர்வேசுரன் நேசித்துத் தேடுகிற தேவ ஆராதனையை அவருக்குத் தர முடியும்.** இதை அறிந்தே "நன்மையானதற்கெல்லாம் பகைவனாய்" இருப்பவன் தானியேல் அறிவித்த "அன்றாட, தினகாலப் பலி நிறுத்தப்படுவதைத்" தனது ஊழியர்களின் வழியாக, ஒரு பொதுச் சங்கத்தின் மூலம் செயல்படுத்தியிருக்கிறான். இன்று உலகெங்கும் "அருட்பணியாளர்களும்,"

பெண்களும் ஒன்றுசேர்ந்து நடத்துகிற "ஆண்டவரின் இராவுணவு" கடவுளுக்குரிய ஆராதனையை அவருக்குச் செலுத்துவதற்குப் பதிலாக, நிந்தை அவமானங்களையே அவர் மீது குவிக்கிறது. புதுப் பூசை கடவுளுக்கு உண்மையான ஆராதனை செலுத்த இயலாததாயிருக்கிறது! அது பலியாகிய தேவ செம்மறிப்புருவையானவர் இல்லாத, மனிதனை மையமாகக் கொண்ட வெறும் மனித வழிபாடாக இருக்கிறது.

"சத்தியத் திருச்சபை மறைந்திருப்பதும்" (சலேத் மாதாவின் தீர்க்கதரிசனம்), "தினகாலப் பலியும், அதன் பரிசுத்த ஸ்தலமும் பங்கப்படுத்தப்பட்டுள்ளதுமான" (தானி. 8:11) இந்த அவல நிலையில், கத்தோலிக்க விசுவாசிகள் சத்தியத் திருச்சபையின் மெய்யான திவ்ய பலிபூசையாகிய பரிசுத்த திரிதெந்தீன், இலத்தின் பூசையிடம் தஞ்சமடையக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஏனெனில் அது சேசுவின் திவ்ய பலி; அதில் சேசுநாதர் மெய்யாகவே மனிதர்களின் பாவங்களுக்குப் பரிகார மாகத் தம் திருச்சரீரத்தையும், இரத்தத்தையும் அப்ப, இரச வடிவில் பிதாவுக்கு ஒப்புக் கொடுக் கிறார். திவ்ய பலிபூசை மூலம் செலுத்தப்படும் தேவ ஆராதனையோடு ஒப்பிடும்போது, தனி மனித ஆராதனை மிக அற்பமானதாகவும், ஒன்றுமில்லாமையாகவும் இருப்பதால், உண்மையான ஆராதனையைக் கடவுளுக்குச் செலுத்த, பூசையை விட்டால் நமக்கு வேறு வழியில்லை.

ஆகவே, மாதாவின் வழியாக சேசுவுக்குத் தங்களை அடிமைகளாக ஒப்புக்கொடுக்கும் சிறிய ஆத்துமங்களிடம் கடவுளை ஆராதிக்கும்படியாகவும், அவரை ஆராதியாதவர்களுக்காக மன்னிப்பை மன்றாடும்படியாகவும், மெய்யான திவ்ய பலிபூசையைத் தேடி வரும்படியாகத் தன் தூதரின் வழியாக தேவ அன்னை கேட்கிறார்கள். அதை நமக்குத் தரக்கூடிய "**அநேக, பரிசுத்த குருக்களைத் தரும்படியாகவும்**" திவ்ய பலிபூசையின் வழியாகவே மன்றாடுவதும் அவர்களது கடமையாக இருக்கிறது. ஏராளமான தடவைகள் இந்த வார்த்தைகளைச் சொல்லி மன்றாடியும், குருக்களின் எண்ணிக்கை பெருகாததற்குக் காரணம், இந்த வார்த்தைகளின் ஆழத்தை உணர்ந்து, அவற்றை நாம் ஏக்கத்தோடும், நம்பிக்கையுறுதியோடும் சொல்லி மன்றாடுவதில்லை என்பதே.

**"உம்மை நம்பாதவர்களுக்காகவும்":** தேவ நம்பிக்கை இரு வகையானது. (1-வது) சுபாவத் திற்கு மேலான காரியங்களில் நம்பிக்கை, (2-வது) உணவு, உடை போன்ற அத்தியாவசிய உலகத் தேவைகளுக்காக அவரைச் சார்ந்திருத்தல் ஆகியவை. சுபாவத்திற்கு மேலான நம்பிக்கையில், "சேசுநாதர் சுவாமி பாடுபட்டுச் சிந்தின திரு இரத்தத்தைப் பலன்களைப் பார்த்து, நம் பாவங் களையெல்லாம் பொறுத்து, நமக்கு அவருடைய **வரப்பிரசாதங்களையும், மோட்ச பாக்கியத்தையும்** தந்தருள்வார்" என்ற நம்பிக்கையும், அதற்காக, குழந்தைகளுக்குரிய நம்பிக்கையோடு பரலோகத் திலிருக்கிற நம் பிதாவிடம் மன்றாடுவதும் அடங்கியிருக்கிறது. அத்தியாவசிய உலகத் தேவை களின் காரியத்தில், சேசுநாதர் சுவாமிதாமே "ஆகாயத்துப் பட்சிகளையும்," "வயல்வெளிகளில் உள்ள லீலிப் புஷ்பங்களையும்," "இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படும் காட்டுப் புல்லையும்" உதாரணமாகக் காட்டி, நம் நம்பிக்கையைப் பலப்படுத்துகிறார். இவை அனைத்திற்காகவும் முழு நம்பிக்கையோடு தம்மைச் சார்ந்திருக்க அவர் நம்மை வற்புறுத்துகிறார்.

ஆனாலும் அவர் ஒரு நிபந்தனையை விதிக்கிறார்: "**சர்வேசுரனுடைய இராச்சியத்தையும் அவருடைய நீதியையும் முந்தமுந்தத் தேடுங்கள். அப்போது இவை எல்லாம் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும்**" (மத். 6:33). இவ்வாறு, தேவ விசுவாசத்திற்கும், தேவ நம்பிக்கைக்கும் இடையே உள்ள பிரிக்க முடியாத பிணைப்பு உறுதிப்படுத்தப்படுகிறது. ஏனெனில் தேவ நம்பிக்கையின் பலன்களைப் பெற, முதலில் சர்வேசுரனுடைய இராச்சியத்தையும், அவருடைய நீதியையும் தேட வேண்டியுள்ளது. அப்படித் தேடுவதற்கு முதலில் அவற்றை மனிதன் விசுவசிக்க வேண்டியுள்ளது.

ஆனால் சகல சத்தியங்களும் மறுதலிக்கப்படும் இன்றைய நாளில், அதன் காரணமாகவே தேவ நம்பிக்கையும் பலவீனப்பட்டிருக்கிறது. மனிதன் தன் சொந்த பலத்தில் நம்பிக்கை வைக்கிறான். அதனாலேயே அவன் எவ்வளவு சம்பாதித்தாலும், வறுமையிலேயே வாழ்கிறான். ஏனெனில் அவனது ஆசைகளுக்கு உச்ச வரம்பில்லை. பரலோக சம்பாவனையிலும், நரக தண்டனையிலும் அவனுக்கு விசுவாசமில்லை. எனவே இவ்வுலகில் எதிலும் அவனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. ஆனால் உண்மையான, நடைமுறைக் கிறீஸ்தவனுக்கு அடிப்படை தரித்திரம் என்ற ஒன்று இல்லை. "அவனே விரும்பித் தேர்ந்துகொள்கிற தரித்திரம் மட்டுமே அவனிடம் இருக்க முடியும்." எனவே, மோட்ச பாக்கியத்தையும், அதை அடையத் தேவையான உலக நன்மைகளையும் கடவுளிட மிருந்து பெற்றுக்கொள்ள உறுதியாக அவரை நம்பியிருக்கவும், இந்த நம்பிக்கை இல்லாதவர் களுக்காக ஜெபிக்கவும் மாதா நம்மை அழைக்கிறார்கள்.

**உம்மை நேசியாதவர்களுக்காகவும்:** "கேள்வியால் வருகிற விசுவாசம்" (உரோ. 10:17) இன்றி, தேவசிநேகமும், அதற்கு ஒப்பான பிறர்சிநேகமும் இல்லை. ஏனெனில் "தம்மை அறிந்து, சிநேகித்து, சேவித்து, மோட்சம் அடைவதற்காகவே கடவுள் மனிதனைப் படைத்தார்." ஆகவே, அறிதல் இன்றி சிநேகம் இல்லை. இன்றைய மிகப் பெரும் தேவை இதுவே. "பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவார்கள்?" (உரோ. 10:14). இன்று பிரசங்கிக்கக் கடமை யுள்ள ஞான மேய்ப்பர்களிடம் விசுவாசமில்லாததால், ஞானமுமில்லை. அவர்கள் உலக ஞானத்தை மட்டுமே போதிப்பதால், விசுவாசிகளிடம் தேவசிநேகம் வளர்வதற்கு வாய்ப்பில்லை. ஆகவே, மீண்டும் முடிந்த வரை அதிகமான ஏக்கத்தோடும், ஆன்ம தாகத்தோடும் "ஆண்டவரே, எங்களுக்கு அநேக பரிசுத்த குருக்களைத் தாரும்" என்று மன்றாட நாம் அதிகம் கடமைப்பட் டிருக்கிறோம். இது எப்பேர்ப்பட்ட சத்தியம்! சத்திய விசுவாசத்தால் நிறைந்திருக்கிற குருக்களின்றி, தேவசிநேகமில்லை. ஆ, பாரம்பரிய கத்தோலிக்கக் குருக்களின் திருப்பாதங்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன (இசை. 52:7; நாகும். 1:15; உரோ. 10:15)!

எனவே, நாமும், நம் அயலார் அனைவரும் இரட்சணியமடைய இன்றியமையாத தேவை யாகிய தேவசிநேகமாகிய புண்ணியத்தை அனுசரிக்கவும், அதை அனுசரியாதவர்களுக்காக ஜெபிக்கவும் நம் ஆத்துமங்களின் திருமாதா நம்மிடம் கேட்கிறார்கள். ஏனெனில் இன்றைய உலகம் அவர்களுடைய திருச்சுதனைப் புறக்கணிக்கிறது. அவர் அவர்களுக்குச் செய்கிற சகல நன்மைகளுக்கும் பிரதிபலனாக அவர்களிடமிருந்து அவர் பெறுவதெல்லாம் தேவநிந்தையும், தேவ தூஷணங்களும், நன்றிகெட்டதனமும் மட்டுமே. திருச்சிலுவையில் தொங்கியபோது, தம்மைச் சுற்றிலும் ஒலித்த அருவருப்பான தேவ தூஷணங்களுக்கு மத்தியில், அவர் தம்மை அளவற்ற விதமாய் நேசித்த தம் திருமாதாவையும், பரிசுத்தர்களின் பிரதிநிதியான அர்ச். அருளப் பரையும், மெய்யாகவே மனந்திரும்பித் தம்மை நேசிப்பவர்களின் பிரதிநிதியான அர்ச். மரிய மதலேனம்மாளையும் கண்டார். அவர்களைக் கண்டதால், மிகுந்த ஆறுதலோடு அவர் மரண மடைந்தார். இன்றோ, தேவமாதா அவரோடிருக்கிறார்கள். ஆனால் அவர்களோடு நின்று அவருக்கு ஆறுதல் தரத் தயாராக இருக்கும் அருளப்பரையும், மதலேனம்மாளையும் அவரால் அதிகம் காண முடிவதில்லை. ஆம், திவ்ய கன்னிகை கூறியதுபோல, அவர்களுடைய திருக் குமாரன் ஏற்கெனவே நொந்து போயிருக்கிறார். ஆகவே, அவர்களுடைய அழைப்பை ஏற்று, அவருக்குத் தங்கள் நேசத்தால் ஆறுதலளிக்க அவர்களுடைய சிறிய பிள்ளைகள் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறார்கள்! போதுமான எண்ணிக்கையில் விசுவாசிகள் சேசுநாதரை விசுவசித்து, ஆராதித்து, நம்பி, நேசிக்கும்போது, உலகம் உண்மையான சமாதானத்தைப் பெற்றுக் கொள்ளும். அப்போது கடவுள் உண்மையாகவே ஆராதிக்கப்படுவார். மரியாயே வாழ்க!

# தேவமாதாவின் வல்லமையுள்ள திருநாமம்!

**தேவமாதாவின் திருநாமம் ஏன் வல்லமை மிக்கதாகவும், பசாசுக்களை நடுநடுங்கச் செய்வதாகவும் இருக்கிறது?**



*ஏனெனில் சேசுவின் மனிதாவதாரத்திற்காகவே பரலோகமும், பூலோகமும் படைக்கப்பட்டன. கத்தோலிக்கப் பாரம்பரியம் அறிவிக்கிறபடி, தேவ திருச்சுதன் ஏற்கெனவே உலகில் சிருஷ்டிக்கப்பட்டுப் பலுகிப் பெருகியிருக்கிற ஆதாமின் பரிசுத்தமான மக்களினத்தில் வந்து அவதரிக்கும் போது, சம்மனசுக்கள் அவருக்கும், அவரது மாதாவுக்கும், அவரது தெய்வீகத்தில் பங்கடைய இருக்கும் மனிதர்கள் அனைவருக்கும் பணியாளர்களாகவும், காவல் தூதர்களாகவும் இருக்க வேண்டுமென்று தேவ பிதா சம்மனசுக்களுக்குத் தந்த கட்டளைதான் அவர்களது நன்மைத்தனத்தை நிரூபிக்கும் நிபந்தனையாக அவர்கள்முன் வைக்கப்பட்டது. ஒளியின் மகனாயிருந்தவனும், சம்மனசுக்கள் அனைவரிலும் மிகுந்த வல்லமையும், அதிகாரமும் உள்ளவனுமாகிய லூசிபர் இந்தக் கட்டளையை எதிர்த்துதான் கலகம் செய்தான். சம்மனசுக்களின் சுபாவத்திற்குப் கீழானதாகப் படைக்கப்பட இருந்த மனுக்குலத்திற்கும், அதில் அவதரிக்க இருந்த தேவ சுதனுக்கும், அவரது திருத்தாயாருக்கும் ஊழியம் செய்ய அவனது ஆங்காரம் அவனை அனுமதிக்கவில்லை. இந்த அவனது கலகம், கடவுளுக்கே கூட ஊழியம் செய்ய முடியாத ஆங்காரத்தின் சிகரத்திற்கு அவனை இட்டுச் சென்றது. வல்லமையுள்ள சிருஷ்டியாயிருந்த அவன் தன்னைப் படைத்த வல்லமையாகிய தெய்வீகத்திற்கு இணையானவனாகத் தன்னைக் கருதினான். கடவுளின் சிங்காசனத்திற்கு மேலாகத் தன் சிம்மாசனத்தை அமைக்கப் போவதாக அவன் கொக்கரித்தான்.*

*இவ்வாறு, தனது பரிபூரண மடமையில் தன்னைத்தானே உயர்த்தியதால், தன் பெயருக்குத் தகுதியற்றுப் போன சாத்தானையும், அவனுடைய கலகத்தில் சேர்ந்துகொண்ட மற்ற சம்மனசுக்களையும் கடவுள் நரகம் வரைக்கும் தாழ்த்தினார். யாருக்கு அடிபணிய மாட்டேன் என்று அவன் எதிர்த்து நின்றானோ, அந்த ஸ்திரீயையும், அவர்களது வித்தாகிய தமது திருச்சுதனையுமே அவனது ஆங்காரத்தின் தலையை நசுக்குபவர்களாக அவர் ஏற்படுத்தினார். இவ்வாறு, ஆதியாகமம் 3:15-ன்படி, ஸ்திரீயாகிய திவ்ய கன்னிகைதான் பசாசுக்கு எதிராகக் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட அவனது முதல் எதிரியாக இருக்கிறார்கள். அவர்களுடைய பரிசுத்த வித்தாகிய சேசுநாதரோ, பசாசின் வித்தாகிய பாவத்தின் எதிரியாக இருந்து, தம்முடைய திருப்பாடுகளுடையவும், திருமரணத்தினுடையவும் அளவற்ற தாழ்ச்சியைக் கொண்டு பாவத்தின் மீது வெற்றிகொண்டார்.* **ஆகவே, சேசுவின் திருநாமத்தை பரலோகத்தாரும், பூலோகத்தாரும், பாதாள லோகத்தாரும் மண்டியிட்டு ஆராதிக்கிறார்கள். சேசுவின் திருநாமத்திற்குப் பசாசுகள் அஞ்சி நடுங்குவது போலவே, அவருடைய திருமாதாவின் திருநாமத்திற்கும் அவை அஞ்சி நடுங்குகின்றன.**

*இவ்வாறே திவ்ய கன்னிகை தேவ வல்லமையின் பிரதிநிதியாக இருக்கிறார்கள். தேவமாதாவின் திருப்பெயர் உச்சரிக்கப்படும்போதெல்லாம், தேவ வல்லமை தங்களுக்கு எதிராகத் தூண்டப்படுவதை சாத்தானும் அவனுடைய தூதர்களும் உணர்கிறார்கள், உணர்ந்து நடுநடுங்குகிறார்கள்.*

*உலகில் இன்று இரு எதிரெதிரான படையணிகள் ஒன்றையொன்று எதிர்த்துப் போராடுகின்றன.* **ஒன்று,** *தன் திருக்குமாரனாகிய சேசுநாதரின் விருதுக்கொடியாகிய சிலுவைக் கொடியை*

ஏந்தி நிற்கும் திவ்ய கன்னிகையின் தலைமையின் கீழ் ஒன்றுதிரண்டிருக்கும் அவர்களுடைய சிறிய பிள்ளைகளின் தெய்வீக வல்லமை மிக்க படையணி; **மற்றொன்று** சாத்தானின் அதிகாரத்தின் கீழ் நன்மையானதையெல்லாம் எதிர்த்து நிற்கிற பசாசுக்களுடையவும், இவ்வுலகில் கேவலம் சில உலக நன்மைகளுக்காகப் பசாசுக்களின் ஊழியர்களாகத் தங்களைத் தாங்களே சபித்துக்கொண்ட அற்ப மனிதர்களுடையவும் படையணி. இன்று வெளிப்பார்வைக்கு இந்தத் தீமையின் படை யணியே உலகத்தில் வெற்றிக்கு மேல் வெற்றி பெற்று வருவதாகத் தோன்றுகிறது. ஆர்ப்பரித்து வருகிற தீமையின் அசுத்த வெள்ளத்தில் இன்று உலகம் மூழ்கடிக்கப்பட்டிருக்கிறது. தீமையான தெல்லாம் இன்று மனிதர்களால் இனிமையானவையாகப் பார்க்கப்படுகின்றன. மனிதர்கள் பாவம் செய்வதில் பெருமை கொள்கிறார்கள். வேசித்தனத்தில் ஊறியவர்கள் மக்களால் கொண் டாடப்படுகிறார்கள்; கடவுளின் பத்துக் கற்பனைகளையும், திருச்சபைக் கட்டளைகளையும் மீறுவதும், அவற்றை எதிர்த்து நிற்பதும் உலகில் சுதந்திரமாக மதிக்கப்படுகிறது.

இந்தத் தீமைகளை எதிர்த்து நிற்க வேண்டிய திருச்சபையோ இன்று **ஏகம், பரிசுத்தம், கத்தோ லிக்கம், அப்போஸ்தலிக்கம்** என்னும் தன்து நான்கு அடையாளங்களையும் பெருமளவுக்கு இழந்து, அழிந்து போக விரும்புவதாகத் தோன்றுகிறது. சேசுநாதர் எதன் மீது ஏறி நின்று மனிதர்களுக்குப் போதித்தாரோ, அந்த இராயப்பரின் படகுக்கு எதிராக, இதற்கு முன் ஒருபோதும் இருந்திராத வகையில் புயல் வந்து மோதுகிறது; அலைகள் அதை மூழ்கடித்து விடப் போவதாக ஆர்ப்பரிக் கின்றன. ஆனால் நாம் பயப்படத் தேவையில்லை. நம்மைச் சூழ்ந்திருக்கும் தீமைகளைக் கண்டு நம்பிக்கையிழக்கத் தேவையில்லை. ஏனெனில் பசாசுக்களின் எதிரியாகக் கடவுளால் ஏற்படுத்தப் பட்டிருக்கிற ஸ்திரீயாகிய திவ்ய கன்னிகை ஆண்டவரின் **படைத்தலைவியாக** இருக்கிறார்கள்.

தங்களுடைய இன்றைய வெற்றிகள் எல்லாம் வெறும் வெளித் தோற்றமே என்பதையும், ஒரே கணத்தில் தங்களை அடித்து வீழ்த்தி, சர்வேசுரனுடைய இராச்சியத்தை இவ்வுலகில் மீண்டும் ஸ்தாபிப்பதற்கு **திவ்ய கன்னிகையின் திருநாமம்** ஒன்றே கூட போதுமானது என்பதையும் பசாசுக்கள் அறிந்திருக்கின்றன. எனவே, கடவுள் அனுமதிக்கும் வரையிலும், அவர் "போதும்!" என்று முழங்கும் வரையிலும், தங்களுக்கு இன்னும் சிறிது காலமே எஞ்சியிருப்பதை அறிந்திருக்கிற பசாசுக்கள், முடிந்த வரை அதிகமான ஆத்துமங்களை நரகத்திற்கு இழுத்துச் செல்லப் போராடு கின்றன. ஆயினும் தேவமாதாவின் தாழ்ச்சியுள்ள பிள்ளைகளாயிருந்து, ஜெபத்திலும், தியானத் திலும், தபசு செய்வதிலும், புண்ணியங்கள் அனைத்திலும் அவர்களைக் கண்டுபாவிக்கப் பிரயாசைப்படுகிற கடவுளின் மக்கள் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. ஏனெனில், "**சந்திரனைப் போல் அழகும். சூரியனைப் போல் காந்தியும் (ஒளியும்) படைத்தவளாய்க் கொடிகள் பறக்கப் போருக்கு முஸ்திப்பாயிருக்கின்ற படையைப்போல் (பசாசுகளுக்குக்) கொடிய அச்சம் வருவிக்கத்தக்கவளாய் அருணோதயம் (சூரிய உதயம்) போல் எழுந்திருக்கின்ற**" (உன். சங். 6:9) தேவமாதாவின் அடைக் கலத்தில் அவர்கள் இருக்கிறார்கள்.

மரியாயே வாழ்க!

## மாமரியின் மகனாயிரு!

ஒரு மகன் தாயை நேசிப்பது போல நீயும் மாமரியை நேசி. சேசுவிடம் செல்ல அவர்கள்தான் பாதை. இப்பாதை குறுக்குப் பாதை, எளிதான பாதை, பாதுகாப்பான பாதை. மாமரிக்குத்தான் எங்கே பாம்பு (பசாசு) பதுங்கியிருக்கிறது, எங்கே ஆபத்து மறைந்திருக்கிறது, எங்கே நெரிசல் இருக்கிறது, எங்கே ஒற்றையடிப் பாதை இருக்கிறது, எது இரகசிய வழி என்பதெல்லாம் நன்கு தெரியும் - **முத்திப்பேறு பெற்ற எட்வர்ட் போப்.**

"அர்ச். சூசையப்பரின் பரிசுத்ததனத்தை விசுவாசிகள் கண்டுகொள்ளும்போது, வெற்றியின் முழக்கம் கேட்கப்படும்" –அர்ச். இசோலானிஸ் இசிதோர்.

# அர்ச். சூசையப்பருக்கும், பழைய ஏற்பாட்டின் சூசைக்கும் உள்ள ஒற்றுமை



தங்கள் குழந்தையை வளர்ப்பதில் சூசையின் பெற்றோர் மிகுந்த மகிழ்ச்சியை அனுபவித்தனர்! அவர்களது அன்பு கனிவு மிக்கதாயிருந்தது! என்றாலும், எகிப்தின் பரிபாலகராக இருந்த பழைய ஏற்பாட்டின் சூசையின் பெற்றோரிடமிருந்து நம் சூசையின் பெற்றோரின் நிலை மிக வேறுபட்டதாக இருந்தது! பழைய ஏற்பாட்டு சூசை, நம் சூசையப்பரின் ஒரு முன்னடையாளமாக, மாதிரியாக இருந்தார். அவர் தந்தை தமது மற்ற மகன்களை விட அதிகமாக அவரை நேசித்தது போலவே, பிதாவும் (மாமரி நீங்கலாக) தம்முடைய மற்ற எந்தப் படைப்புகளுக்கும் மேலாக நம் சூசையை நேசித்தார். ஏனெனில், பிதா சூசையப்பரை மனிதனாக அவதரிக்க இருந்த வார்த்தையானவருக்குத் தந்தையாகவும், கடவுளின் பரிசுத்த அன்னைக்கு மணவாளராகவும் இருக்கும்படி முன்னியமகம் செய்திருந்தார். எகிப்தின் சூசையை அவருடைய தந்தை பல வண்ணமுள்ள ஓர் விலையுயர்ந்த ஆடையால் உடுத்தினார். **நம் சூசை** தேவ வரப்பிரசாத வாழ்வைக் கொண்டு பிதாவால் உடுத்தப்பட்டார்.

**முந்தின சூசை** தம் சகோதரர்களால் வெறுக்கப்பட்டு, ஓர் அடிமையாக விற்கப்பட்டார்; **நம் சூசையின்** பெற்றோரின் மரணத்திற்குப் பிறகு, அவருடைய தந்தை வழிச் சொத்து, அநீதியான முறையில் அவரிடமிருந்து பறிக்கப்பட்டது. இதன் காரணமாக ஜெருசலேமில் அவர் ஓர் அன்னியராகவும், தம் ஜீவனத்திற்கு ஒரு தொழிலைக் கற்றுக்கொள்ள வேண்டியவராகவும் ஆனார். எகிப்தின் சூசை கனவுகளின் பொருளை விளக்குபவராக இருந்தார். நம் சூசையோ ஒரு தேவதூதரைத் தம் தோழராகப் பெற்றிருந்தார். இவர் அவருடைய கனவுகளுக்குப் பொருள் விளக்கம் தந்து, கடவுளைப் பிரியப்படுத்தவும், அவருடைய திருச்சித்தத்தை நிறைவேற்றவும் சூசை என்ன செய்ய வேண்டும் என்று அவருக்கு அறிவுறுத்தி வந்தார்.

பழைய சூசை எகிப்தின் அரசனின் பிரதிநிதியாக இருந்தார். நம் சூசையோ, இவ்வுலகமாகிய எகிப்து தேசத்தில் கடவுளுக்கே பிரதிநிதியாக இருந்தார். பழைய சூசை தம் எஜமானனாகிய புத்திபாருக்குப் பிரமாணிக்கமாயிருந்து, அயலானின் மனைவியை மனதாலும் தொடாத மகா பரிசுத்தராயிருந்தார்; நம் சூசையோ இஸ்பிரீத்துசாந்துவானவரின் அர்ச்சியசிஷ்ட பத்தினியும், தம் சொந்த மணவாளியுமான மிகப் பரிசுத்த கன்னிகையின் ஆத்துமத்தினுடையவும், சரீரத்தினுடையவும் மாசற்றதனத்தை பக்தியோடு வணங்கி வந்ததில், அல்லது அதைவிட மேலாக, அந்தப் பரிசுத்த அன்னையின் மிகப் பரிசுத்த கன்னிமையின் பாதுகாவலராக ஆனதில், இஸ்பிரீத்துசாந்துவானவருக்குப் பிரமாணிக்கமானவராக நிலைத்திருந்தார்.

பழைய ஏற்பாட்டின் சூசை எகிப்திய மக்களுக்காக தானிய அறுவடையைச் சேகரித்துப் பாதுகாத்து வைத்தார்; நம் சூசை தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் கோதுமையாகவும், விசுவாசிகளின் போஜனமாகவும், பலமாகவும் இருக்க நியமிக்கப்பட்ட ஜீவனானவரின் பாதுகாவலராக

இருந்தார். யாக்கோபின் சூசை தம் பெற்றோருக்கும், எகிப்து முழுவதற்கும் ஆறுதலின் காரணமாக இருந்தார். நம் சூசையோ தேவ வார்த்தையானவரின் ஆறுதலாக இருந்தார். தமது உழைப்பாலும், வியர்வையாலும் அவருக்கு உணவளித்து வந்தார். சேசுநாதரின் திருத்தாயாரின் பயணங்கள் அனைத்திலும் சூசையப்பர் அவர்களுக்கு ஆறுதலாக இருந்தார். மேலும், சகல பிரமாணிக்கமுள்ள ஆன்மாக்களின் தேவைகளிலும், குறிப்பாக அவர்களுடைய மரண நேரத்திலும் அவர் ஆறுதலாக இருந்தார். இன்னும் கூட ஆறுதலாக இருக்கிறார்.

இராக்கேலின் சூசை தம் எஜமானனால் மிக அதிகமாக நேசிக்கப்பட்டார்; நம் சூசையப்பரோ, பூவுலகில் கடவுளின் பிரதிநிதியாகவே இருந்ததால், இன்னும் மிக அதிகமாக அவரால் நேசிக்கவும் ஆதரிக்கவும்பட்டார்! உலகில் வாழ்ந்த மனிதர்களுள் நம் சூசையப்பரோடு ஒப்பிடத் தகுந்தவன் ஒருவனுமில்லை, அவரைப் போல கடவுளால் வெகுவாக ஆதரிக்கப்பட்டவனும், உயர்த்தப்பட்டவனும் எவனுமில்லை. தேவ வார்த்தையானவரின் கன்னித் தாயார் என்ற முறையில், நம் சூசையப்பரின் பரிபூரண மாசற்ற மணவாளியாகிய திவ்ய கன்னிகை மட்டுமே அவரை விட அதிகமாக, ஒப்பற்ற முறையில் தேவ சலுகைகளைப் பெற்றிருந்தார்கள். அவர்கள் மட்டுமே ஒப்பற்ற விதமாக, அவருக்கு மிக மேலான இடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்தார்கள்.

சூசையப்பரின் வளர்ச்சியின் காலம் பெற்றோருக்குப் பெரும் ஆசீர்வாதத்தின் காலமாக இருந்தது. இந்த மிக இளம் வயதிலேயே அவர் பாவிகளுக்காக அதிகமாக ஜெபித்து வந்ததால், இன்னும் மிக அதிகமாக அவர் தம் பெற்றோருக்காக தேவ ஆசீர்வாதத்தை மன்றாடி வந்தார்! ஆண்டவரும் அவரது மன்றாட்டைக் கேட்டருளினார், ஏனெனில் அவர்கள் புண்ணியத்திலும், தங்கள் தேவசிநேகத்திலும், பிறர்சிநேகத்திலும் வெகுவாக அதிகரித்து வந்தார்கள்.

சூசையின் அன்னை அவரைத் தூக்கி வைத்திருக்கும்போதெல்லாம், வானத்தைப் பார்க்கக் கூடிய ஓரிடத்தில் சூசை இருக்க நேர்ந்தபோது, அவர் வானத்தையே விடாமல் பார்த்துக்கொண்டிருப்பார். அவருடைய தாய் இதைக் கவனித்து வந்ததால், அடிக்கடி அவர் வானத்தைத் தெளிவாகப் பார்க்கக்கூடிய இடத்திற்கு அவரைத் தூக்கிக் கொண்டுவந்து வைத்திருப்பதை வழக்கமாக்கிக் கொண்டாள். அவர் துயரமாக இருப்பதை அவள் கண்ட ஒவ்வொரு முறையும் இதை அவள் செய்தாள். ஏனெனில் வானங்களைக் காண்பது அவரை வெகுவாக மகிழ்விப்பதை அவள் அறிந்திருந்தாள். அதே சமயத்தில், கடவுளின் அற்புதமான கைவேலைகளில் அவரது உன்னத மகத்துவத்தை அவளும் கண்டுதியானித்து, அதில் ஆத்தும அக்களிப்பைக் கண்டடைந்தாள்.

## அர்ச். சூசையப்பர் நம் வளர்ப்புத் தந்தை!

“அர்ச். சூசையப்பர் நமது ஆண்டவரின் வளர்ப்புத் தந்தையாக இருந்தார். அவரே நம் திவ்ய இரட்சகரின் திருமாதாவின் கணவராகவும் இருந்தார். இவ்விரு பெரும் பதவிகளும் மற்ற அர்ச்சியசிஷ்டவர்களை விட அர்ச். சூசையப்பரை மகா உயரத்தில் வைக்கின்றன. நாம் சேசுநாதரின் சகோதரர்கள். எனவே சூசையப்பர் நம் வளர்ப்புத் தந்தை. ஒவ்வொரு ஆண்டும் புனித சூசையப்பர் திருநாளன்று ஒரு ஞானப் பூச்செண்டை அவருக்குக் காணிக்கையாகத் தந்து, ஏதாவது ஒரு சிறப்புச் சலுகையை அவரிடம் கேட்டுப் பெறும் அர்ச். அவிலா தெரேசம்மாளின் வழக்கத்தை நாமும் அனுசரிப்போம்.

அர்ச். சூசையப்பரே, பல ஆண்டுகள் மாமரிக்கும் சேசுவுக்கும் நெருக்கமாக உலகில் வாழ்ந்தீரே. உம்மைப் போலவே அவர்களுக்கு மிகப் பிரியமாக நடக்க எங்களுக்குச் சொல்லித் தாரும்”

**- முத்திப்பேறு பெற்ற எட்வர்ட் போப்.**

# அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாளின் ஆன்மீகம்!

சுவிசேஷத்தின் அடிப்படை, மாசற்றதனத்திற்குத் திரும்பி வருவதே திருச்சபையின் ஞான ஜீவியத்திற்கு அர்ச். தெரேசம்மாளின் ஒப்பற்ற பங்களிப்பாக இருந்தது. "நீங்கள்... பாலர்களைப் போல் ஆகாவிட்டால், பரலோக இராச்சியத்திலே பிரவேசிக்கமாட்டீர்கள்" (மத்.18:3) என்ற சுவிசேஷ வாக்கியமே அவளது ஆன்மீகத்தின் அடிப்படையாக இருக்கிறது.



1897, ஜூன் மாதத்தில் மிகவும் நோயுற்றிருந்த நம் அர்ச்சிய சிஷ்டவள் தனது மடத்துத் தாயார் மரீ த கொன்ஸாகேயின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து, தனது துறவற வாழ்வின் நினைவுகள் பற்றி ஒரு சிறு குறிப்பேட்டில் எழுதித் தந்தாள். அதன் இரண்டாம் பக்கத்தில், தன்னுடைய மிகப் பெரிய ஆன்மீகக் கண்டுபிடிப்பு பற்றி அவள் பேசுகிறாள். அதற்கு அவள் "**தெரேசாளின் சிறிய வழி**" என்று பெயரும் சூட்டுகிறாள். இதுவே அவளுடைய வாழ்வின் கடைசி மூன்று வருடங்களில் அவளுடைய வாழ்வில் சுடர் வீசிப் பிரகாசித்த ஆன்மீகமாக இருந்தது.

"நான் ஒரு பெரிய அர்ச்சியசிஷ்டவள் ஆவதன் மூலம் உங்களை மகிமைப்படுத்துவேன்" என்று தெரேசம்மாள் தன் தந்தைக்கு ஒரு முறை எழுதினாள். ஆனால் கார்மெல் மடத்தில் சேர்ந்த சிறிது காலத்திலேயே தன் பலவீனங்களை அவள் புரிந்துகொண்டாள். திருச்சபையின் அர்ச்சியசிஷ்டவர்களோடு தன்னை ஒப்பிடும்போது, அவள் அவர்களை பெரிய மலைகளாகவும், தன்னை ஓர் அற்பமான மணற்துகளாகவும் காண்கிறாள். "உத்தமதனத்தில் வளர்வது தனக்கு சாத்தியமேயில்லாத காரியம்" என்று அவள் கூறுகிறாள், என்றாலும் அவள் தன் மன தைரியத்தை, நம்பிக்கையை இழக்கவில்லை. ஏனெனில் பரிசுத்ததனத்தின் மீதான ஆசையைக் கடவுளே தன் இருதயத்தில் விதைத்திருக்கிறார் என்றால், உத்தமதனம் அடைவதற்கான ஒரு சாலையை, அதன் கரடுமுரடான படிக்கட்டுகளில் ஏறிச் செல்லும் வழியை அவரே தனக்குக் காட்டுவார் என்று அவள் நம்புகிறாள்.

"பாலனாயிருக்கிற எவனும் என்னிடம் வருவானாக" (பழ.9:4). "ஆகவே, சின்ன தெரேசாவிடம் கடவுள் என்ன செய்யப் போகிறார் என்று சிந்தித்தபடி நான் வந்தேன்" என்று எழுதுகிறாள் தெரேசம்மாள். "தாயானவள் தன் மகவைச் சீராட்டுவது எங்ஙனமோ அப்படியே உங்களுக்கு ஆறுதல் செய்வோம், நீங்களும் எருசலேமில் சமாதானமடைவீர்கள்" என்ற சர்வேசுரனின் வார்த்தைகளை (இசை.66:13) அவள் வாசிக்கிறாள். அப்போது முதல், தன்னால் இந்தப் படிக்கட்டில் தனியாக ஏற முடியாது என்றாலும், சேசுநாதர் ஒரு துரிதமான மின் ஏணியைப்போலத் தம் திருக்கரங்களில் தன்னை அங்கே சுமந்துகொண்டு போவார் என்று அவள் புரிந்துகொள்கிறாள். அந்நேரம் முதல் தெரேசம்மாளின் சிறிய தன்மை, உத்தமதனத்திற்கு ஒரு தடையாக இராமல், அவளுக்கு ஒரு மிகப் பெரிய வசதியாக மாறுகிறது. அவள் எவ்வளவுக்குச் சிறியவளாகவும், பாரமற்றவளாகவும் இருக்கிறாளோ, அவ்வளவு எளிதாக சேசுநாதர் அவளைச் சுமந்து செல்வார். தெரேசம்மாள் தனது சிறிய வழியை இப்படித்தான் விவரிக்கிறாள். இது முதலாவதாக, கடவுள் யாராயிருக்கிறார் என்ற கண்டுபிடிப்பாக இருக்கிறது. அவர் அடிப்படையில் இரக்கமுள்ள நேசமாக இருக்கிறார்.

ஆனால் சேசுவால் இப்படிச் சுமந்து செல்லப்படுவது மிக எளிதான பாலத்துவத்தைக் குறிப்பது அல்ல! தன் வாழ்வின் எல்லாச் சூழ்நிலைகளிலும், எல்லாச் செயல்களிலும் தெரேசம்மாள் இந்த வழியைப் பயன்படுத்துவாள். கடவுள் இதை அவளிடம் கேட்கிறார். அது தன்னால் இயலாது

என்று அவள் உணர்கிறாள், ஆகவே, அவரே இதைச் செய்யும்படி அவள் அவரிடம் கேட்கிறாள். உதாரணமாக: சேசு தன் சகோதரிகளை நேசிப்பது போல, தானும் அவர்களை நேசிப்பது அவளுக்கு இயலாத காரியம். ஆனால் அவரோடு தெரேசம்மாள் தன்னை இணைத்துக்கொள்ளும்போது, அவரே அவளில் இருந்து அவர்களை நேசிப்பார்!

இங்கே சிறியவர்களும், ஏழைகளும், காயப்பட்டவர்களுமாகிய அனைவருக்குமான பரிசுத்த தனத்தின் ஒரு பாதை திறக்கிறது. அது: நம் பலவீனத்தை ஏற்றுக்கொண்டு, கடவுள் நம்மில் செயல் படும்படி, **நாம் இருக்கிறபடியே தாழ்ச்சியோடு அவருக்குத் நம்மைக் கையளித்து விடுவது**!

கார்மெல் மடத்தில் சேர்ந்ததும், "நான் ஆத்துமங்களை இரட்சிக்கவும், அனைத்திற்கும் மேலாக குருக்களுக்காக ஜெபிக்கவும் வந்தேன்" என்று அவள் அறிவிக்கிறாள். "சேசுவை நேசிப்பதும், அவரைப் பிறர் நேசிக்கச் செய்வதும்" அதிகமதிகமாக அவளுடைய வாழ்வின் குறிக்கோளாக ஆகிறது. தனது மரணத்திற்குப் பிறகு இன்னும் அதிகமாக வேதபோதகியாக இருக்கத் தன்னால் முடியும் என்ற நம்பிக்கையில், அவளுடைய மரணப் படுக்கையிலும் கூட இந்த அவளுடைய ஆசை வெகுவாக அதிகரித்தது: "மோட்சத்தில் எதுவும் செய்யாமல் சந்தோஷமாக மட்டும் இருக்க நான் நினைக்கவில்லை. அங்கேயும் திருச்சபைக்காகவும், ஆத்துமங்களுக்காகவும் உழைப்பதே என் விருப்பம். இதற்கு என்னை அனுமதிக்கும்படி நல்ல ஆண்டவரிடம் நான் கேட்பேன், அவரும் எனக்குப் பதில் தருவார்..." "என் பணி, நான் நல்ல ஆண்டவரை நேசிப்பது போல் அவர் நேசிக் கப்படச் செய்வதும், ஆத்துமங்களுக்கு என் சிறிய வழியைத் தருவதுமான என் பணி, இப்போது தான் தொடங்க இருக்கிறது என்று நான் உணர்கிறேன்..." "உலக முடிவு வரை உலகில் நன்மை செய்வதில் என் மோட்ச வாழ்வைச் செலவிட நான் விரும்புகிறேன்" என்று அவள் எழுதுகிறாள்.

அர்ச். பிரான்சிஸ் சவேரியாரோடு அர்ச். தெரேசம்மாளையும் வேதபோதக நாடுகளின் பாதுகாவலியாகத் திருச்சபை பிரகடனம் செய்தது. சகோதரி தெரேசம்மாள் தன் அறையை விட்டு வெளியே செல்லாமலே, கடவுளின் திரு இருதயத்தின் இரக்கங்களின் பேரொளியை உலகம் முழுவதன் மீதும் பரப்புவதைத் தன் அன்றாட வாழ்வாக்கிக்கொண்டாள்.

தெரேசம்மாள் தனது ஒவ்வொரு செயலையும் சேசுவின் அன்பிற்காகச் செய்தாள். சேசுவுக்காக சகலத்தையும் பொறுத்துக்கொண்டாள்; பாவிகளின் மனந்திரும்புதலுக்காகவும், குருக்களின் வேத போதகப் பணிகளின் வெற்றிக்காகவும், ஆன்மாக்களின் அர்ச்சிப்பிற்காகவும் தனது சகல துன்பங் களையும், தன் நோயின் வேதனைகளையும், மடத்திலும், மற்ற சகோதரிகளிடமிருந்தும் வந்த கஷ்டங்களையும் ஏற்று அனுபவித்து, அவற்றை ஆண்டவருக்கு ஒப்புக்கொடுத்தாள்.

தெரேசம்மாளின் மரணத்திற்குப் பிறகு, குருத்துவ மற்றும் துறவற தேவ அழைத்தல்கள் கட்டுக்கடங்காமல் அதிகரித்தன என்று நாம் தாராளமாகச் சொல்லலாம். அவள் தன் வாக்குறுதி யைக் காப்பாற்றினாள். மிக ஏராளமான குருக்களும், வேதபோதகர்களும் தங்கள் தேவ ஊழியத்தை அவளிடம் ஒப்படைத்து, அதில் மிகப் பெரிய வெற்றிகளைப் பெற்றார்கள்.

இன்று, உலகம் முழுவதும் ஐம்பதுக்கும் மேற்பட்ட துறவற சபைகள் அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாளின் ஆன்மீகத்தைப் பகிர்ந்துகொண்டுள்ளன.

*1873 ஜனவரி 2 அன்று பிறந்த தெரேசம்மாள் 1897, செப்டம்பர் 30 அன்று தனது 24ஆம் வயதில் மரித்தாள். 1923, ஏப்ரல் 29 அன்று பாப்பரசர் பதினோராம் பத்திநாதர் அவளுக்கு முத்திப் பேறு பட்டமும், அதே பாப்பரசர் 1925, மே 17 அன்று அர்ச்சியசிஷ்ட பட்டமும் வழங்கினார்.*

**திருநாள்: அக்டோபர் 3.**

*மரியாயே வாழ்க!*

# நம் காவல் தூதர்களைப் பயன்படுத்திக்கொள்வோம்!



**அர்ச். ஜெம்மா கல்கானியின்** காவல் தூதர் அவளது ஆசிரிய ராக இருந்தார். அவரைக் காண அவள் அனுமதிக்கப்பட்டாள். அந்தரத்தில் விரிந்த இறக்கைகளோடு அவர் தோன்றினார்; அவள் அருகில் முழந்தாளிட்டு ஜெபித்தார்; "சேசுவே, வாழ்க!" என்ற சிறு ஜெபத்தை அதிக பக்தியோடு சொல்வதில் அவளோடு போட்டி யிட்டார். அவரைப் பார்த்தபோதெல்லாம், அவள் பரவச நிலைக்கு உட்பட்டாள். அவர் அவளது வழிகாட்டியாகவும், தோழராகவும் இருந்தார். அவள் ஆலயத்தில் தங்கியிருந்தபின், வீடு வரை அவளோடு சேர்ந்து வந்தார். அவள் வெளியே தனியாகச் சென்ற போது அவர் அவளுக்குத் துணையாகச் சென்றார். பசாசுக்களின் தாக்குதல்களுக்குப் பிறகு, அவரே அவளுக்கு ஆறுதலையும், தெய்வீக உதவிகளையும் கொண்டு வந்தார்; அவளது கன்னிமை யுள்ள உறக்கத்தில் அவளை ஆசீர்வதித்து, அவளுக்குக் காவலாக இருந்தார்; காலையில் அவள் திவ்ய நன்மை வாங்கச் செல்வதற்காக அவரே அவளை எழுப்பியும் விட்டார்.

**அர்ச். பியோ** குழந்தைப் பருவத்திலிருந்தே தமது காவல் தூதரைப் பார்த்து வந்தார். அவரைத் "தமது சின்ன நண்பர், "சின்ன சம்மனசு, நண்பர், சகோதரர், செயலாளர், பரலோகத் தூதர்" என்ற பல பெயர்களால் அவரை அழைத்து வந்தார். அவரைத் தம் அறையின் இரவு நேரக் காவலராக வும், தந்தி, தபால்காரராகவும், கார் ஓட்டுனராகவும், தமக்கு வரும் அந்நிய மொழிக் கடிதங்களை மொழிபெயர்ப்பவராகவும், தமது பேச்சுத் துணைவராகவும் கூட பயன்படுத்தி வந்தார்.

பரிசுத்த வேதாகமத்தில் காவல் தூதர்களைப் பற்றிய ஏராளமான குறிப்புகள் உள்ளன. உதாரண மாக, "மோட்சத்திலே அவர்களுடைய (சிறுவர்களின் (காவல்) சம்மனசுகள் பரமண்டலங்களிலே யிருக்கிற என் பிதாவின் சமுகத்தை இடைவிடாமல் தரிசிக்கிறார்கள்" (மத். 18:10); "உன் சகல வழிகளிலும் உன்னைக் காக்கும்படி உனக்காகத் தமது தூதர்களுக்குக் கட்டளையிட்டார். உன் பாதம் கல்லில் இடறாதபடி அவர்கள் உன்னைத் தங்கள் கைகளில் ஏந்திக்கொண்டு போவார்கள்" (சங். 90:10, 11) என்னும் வேத வாக்கியங்கள் நமக்குப் போதுமானவை.

"நாம் பாவத்தோடு இருக்கும்போது கூட, நம்மை விட்டு விலகாத ஒரு பரலோகப் பாதுகாவ லரின் பாதுகாப்பு நமக்கு எவ்வளவு பெரிய ஆறுதல்! நாம் நம் காவல் தூதரை அடிக்கடி நினைக்க வேண்டும். அவர் தொட்டில் முதல் கல்லறை வரை நம்மை ஒருபோதும் தனியாக விடுவதில்லை. அவர், குறிப்பாக நம் துயர சமயங்களில் நம்மை வழிநடத்திப் பாதுகாக்கிறார். இந்த மாபெரும் தேவ கொடையை நாம் மதித்துப் போற்ற வேண்டும். நம் மரண நேரத்தில் நம் ஆன்மா இந்த இனிய தோழரை நேரடியாகக் காணும். **"எனக்குக் காவலாயிருக்கிற..."** என்ற ஜெபத்தை ஒரு நாளில் பல தடவை சொல்லுங்கள். அவர் உங்கள் அருகில் இருக்கிறார் என்பதை அடிக்கடி நினையுங்கள், அவருக்கு நன்றியும், மரியாதை வணக்கமும் செலுத்துங்கள். அவரது மாசற்ற பார் வையை உங்கள் பாவத்தால் நோகச் செய்வது பற்றி எப்போதும் பயப்படுங்கள்" (**அர்ச். பியோ**).

**ஜெபம்: எனக்குக் காவலாயிருக்கிற சர்வேசுரனுடைய சம்மனசானவரே,**
**தெய்வீகக் கிருபையால் உம்மிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட எனக்கு ஞான வெளிச்சம் தந்து,**
**என்னைக் காத்து நடத்தி ஆண்டருளும். ஆமென்.**

**திருநாள்: அக்டோபர் 2.**

*மரியாயே வாழ்க!*

# அர்ச். பத்தாம் பத்திநாதர்



ஜுஸேப்பே மெல்கியோர் ஸார்த்தோ என்னும் ஞானஸ்நானப் பெயர் கொண்ட அர்ச். பத்தாம் பத்திநாதர் இத்தாலியிலுள்ள ரியேஸ் நகரத்தில், 1835, ஜுன் 2 அன்று பிறந்தார். 1858-ல் குருப்பட்டம் பெற்ற அவர் வெனீஷியாவின் இத்தாலியப் பகுதியில் பங்குக் குருவாக ஆனார். பாப்பரசர் பதின்மூன்றாம் சிங்கராயர் இவரை 1884-ல் மாண்ட்டுவாவின் மேற்றிராணியாராகவும், 1893-ல் கர்தினாலாகவும், வெனீஸின் பிதாப்பிதாவாகவும் ஏற்படுத்தினார். இவர் 1903 ஆகஸ்ட் 4 அன்று பாப்பரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவர் பல்வேறு எதிர்ப்புகளுக்கு மத்தியிலும் தீவிரமான முறையிலும், நிலையான விதத்திலும் பரிசுத்த கத்தோலிக்கப் பாரம்பரியத்தை அனுசரிப்பதிலும், பாதுகாப்பதிலும் புகழ்பெற்றவராக விளங்கினார். அவருடைய அப்போஸ்தலிக்கச் செயல்பாட்டின் சில அம்சங்கள் திருச்சபையின் எதிரிகளின் எதிர்ப்பை எதிர்கொண்டு வெற்றிபெற வேண்டியிருந்தது. உதாரணமாக: நவீனவாதத் தப்பறையை அடக்கி ஒடுக்குதல், மத்தியகால தத்துவவாத, வேதசாஸ்திர போதனைகளின் ஒளியில், பாரம்பரிய கத்தோலிக்க போதனையை மீண்டும் ஸ்தாபித்தல், பிரான்ஸில் திருச்சபையும், நாட்டு அரசாங்கமும் பிரிக்கப்படுவதைக் கடுமையாக எதிர்த்தது ஆகியவையாகும்.

நவீனவாதப் பதிதம் தனது பேய்த்தனமுள்ள நோக்கங்களை அடையும்படி கத்தோலிக்கப் பாரம்பரிய சத்தியங்களை அழித்து விடவும், மூடி மறைத்து விடவும் முயன்றதால், பத்தாம் பத்திநாதர் அதை "சகல தப்பறைகளின் தொகுப்பு" என்று அழைத்து, சில நவீனவாதப் புத்தகங்களை இந்தெக்ஸ் லீப்ரோரும் ப்ரோஹிபித்தோரும் (Index Librorum Prohibitorum) என்ற தடை செய்யப்பட்ட புத்தகங்களின் அட்டவணையில் சேர்த்தார். மேலும் 1907ல் "லெமெந்த்தாபிலி ஸானே எக்ஸித்து" ("புலம்புதலுக்குரிய ஒரு விளைவு பற்றி") என்னும் ஆணை மடலையும், பாஷெந்தி தோமினிச்சி க்ரேஜிஸ் ("ஆண்டவரின் மந்தைகளைப் போஷித்தல்") என்னும் சுற்று மடலையும் வெளியிட்டு, நவீனவாதப் போதனைகளைக் கண்டனம் செய்து, அவற்றை முழுமையாக வேரறுத்து விடத் தேவையான தீர்வுகளை அவற்றில் ஆலோசனைகளாகத் தந்தார். 1910, செப்டம்பர் 1 அன்று, குருமடங்களில் உள்ள ஆசிரியர்கள் அனைவரும், தங்கள் குருப்பட்டத்திற்கு முன்பாக, குருத்துவப் பட்டங்கள் பெற்றவர்களும் நவீனவாதத்தைப் புறக்கணிப்பதாகவும், லாமெந்த்தாபிலி, பாஷெந்தி ஆகியவற்றை ஆதரிப்பதாகவும் வார்த்தைப்பாடு கொடுக்க அவர் கட்டளையிட்டார்.

அர்ச். பத்தாம் பத்திநாதர் "தேவ நம்பிக்கையின் மாதா" என்னும் பெயரில் திவ்ய கன்னிகையின் மீது பக்தி கொண்டிருந்தார். **தேவமாதாவே தன் திருக்குமாரனின் திருச்சபையில் விசுவாசத்தை மீண்டும் தழைக்கச் செய்வார்கள் என்று அவர் உறுதியாக நம்பினார். "பரிசுத்த கன்னிமாமரி தனது திருக்குமாரனின் திரு இரத்தத்தால் மீட்கப்பட்டவர்களை ஒரு கணமும் கூட கைவிடுவதில்லை என்பது சத்தியம். வேறு எந்தக் காலத்தையும் விட, தப்பறைகள் மிகுந்திருக்கிற இந்தக் காலத்தில் அவர்களுடைய இரக்கமும், உதவியும், மன்றாட்டும் நமக்கு அதிகம் அவசிய மாயிருக்கிறது" என்று அவர் அறிக்கையிட்டார்.**

அவருடைய "அத் தியெம் இல்லும்" சுற்றுமடல், **"சகலத்தையும் கிறீஸ்துவுக்குள் புதுப்பித்தல்"** என்னும் அவருடைய விருதுவாக்கை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அவர் விசுவாசிகள்

அடிக்கடி திவ்ய நன்மை உட்கொள்வதை ஊக்குவித்தார். குழந்தைகள் புது நன்மை வாங்கும் வயதைக் குறைத்தார். தம்முடைய முன்னவர்களைப் போல, பத்திநாதரும் அர்ச். தாமஸ் அக்குயினாஸின் வேத சாஸ்திரமும், தத்துவவாதமும் கத்தோலிக்க நிறுவனங்களிலும் குறிப்பாக குருமடங்களிலும் கற்பிக்கப்படுவதை அவர் ஊக்குவித்தார். மேலும், வழிபாடுகளிலும், துறவற மடங்களிலும் கிரகோரியன் இசையைக் கட்டாயமாகப் பயன்படுத்தக் கட்டளையிட்டார்.

பத்தாம் பத்திநாதரின் தோற்றத்திலும், நடத்தையிலும், அர்ச். பிரான்சிஸ்கன் மூன்றாம் சபையில் அவர் உறுப்பினராயிருந்ததைப் பிரதிபலித்த தனிப்பட்ட தரித்திரம் சிறப்பாக வெளிப் பட்டது. அவர் மிக அடிக்கடி போதக மேடையிலிருந்து பிரசங்கங்கள் செய்தார். இது அக்காலத் தில் மிக அபூர்வமான காரியமாக இருந்தது. 1908ல் நிகழ்ந்த மெஸ்ஸினா நிலநடுக்கத்திற்குப் பிறகு, இத்தாலிய அரசாங்கம் விழித்துக்கொண்டு செயல்படத் தொடங்குமுன்பே, அவர் தமது பாப்புத்துவ மாளிகையில் அகதிகளைக் கொண்டு நிரப்பினார். தம் சொந்தக் குடும்பத்திற்குத் தம் நிமித்தமாக எந்த வகையான உபகாரங்களும் செய்யப்படுவதை அவர் நிராகரித்தார். உரோமைக்கு அருகில் வாழ்ந்த அவருக்கு நெருக்கமான உறவினர்கள் தரித்திரத்தில் வாழ்வதைத் தேர்ந்துகொண்டார்கள்.

அர்ச். பத்தாம் பத்திநாதர் 1914, ஆகஸ்ட் 20 அன்று, தமது 79-ஆம் வயதில் மரணமடைந்தார். **“ஆண்டவரே, உம்முடைய திருச்சித்தப்படியே சகலமும் நிறைவேறக்கடவது!” என்பவையே அவருடைய இறுதி வார்த்தைகளாக இருந்தன. அவருடைய ஜீவியத்தைப் போலவே மரணமும் இருந்தது. தாழ்ச்சியும், சமாதானமும் நிறைந்த சாதாரண ஜீவியத்தையே எப்போதும் நாடிய அவர், மிக எளிமையான ஒரு சாதாரண மனிதனாகவே மரித்தார். அவர் மரித்த அறையையும், அதிலிருந்த பொருட்களையும் பார்த்தால், உலகம் முழுவதிலுமுள்ள கத்தோலிக்கர்களின் அரசராயிருந்த புகழ்பெற்ற ஒரு பாப்பரசரின் அறைக்குத் தகுதியுள்ள எந்த அலங்காரமும் அதில் இருக்கவில்லை. மாறாக, ஒரு தபசியின் மடத்தில் இருப்பது போல, ஒரே ஒரு கட்டிலும், அதன் பக்கத்தில் ஒரு சிறு மேஜையின்மீது ஒரு பாடுபட்ட சுரூபமும் மட்டுமே இருந்தன.**

அவரது தேவ பக்தி, மன உறுதியும், திட தைரியமும் நிறைந்த செயல்முறைகள், பரிசுத்ததனம் ஆகியவற்றின் நற்புகழ் பரவத் தொடங்கியது. பாப்பரசர் 12-ஆம் பத்திநாதர் 1951-ஆம் ஆண்டு அவருக்கு முத்திப்பேறு பட்டமும், 1954-ஆம் ஆண்டு அவருக்கு அர்ச்சியசிஷ்ட பட்டமும் வழங்கினார். **திருநாள்: செப்டம்பர் 3.**

மரியாயே வாழ்க!

## அறியப்படாதிருப்பதே மகிழ்ச்சி!

என் இனிய சேசுவே, யாராவது என்னைப் பாராட்டினால், அதை நான் கேட்காதவாறு என் காதுகளை மூடிவிடும். என் சொந்தக் காரியங்களில் நான் திருப்தி அடையாதபடி என் இருதயத்தை மூடிவிடும். நான் அடைந்த வெற்றிகளை, என் சாதனைகளை, பாராட்டு மொழிகளை என் நினைவுகள் அசைபோடாது இருக்கட்டும். என்மீது சொல்லப்படும் வசை மொழிகள், கண்டனங்கள், செய்யாத குற்றங்களை நான் செய்ததாகப் பிறர் கூறும் அபாண்டம் ஆகியவை எனக்கு ஆறுதலாக இருக்கட்டும். யாராலும் அறியப்படாதிருப்பதை நான் நேசிக்கச் செய்தருளும். என்னைத் தெரிந்தவர்களும், நினைவில் வைத்திருப்பவர்களும் என்னைக் குப்பை என்று கருதட்டும். ஆண்டவரே! நான் ஒன்றுமில்லை. எனக்கு உரியது என்று எதுவுமில்லை. என் புண்ணியங்கள் மட்டுமே (மோட்ச வெகுமானத்திற்குரிய) என் செல்வங் களாக இருக்கத் தயைபுரியும்! - **முத்திப்பேறு பெற்ற எட்வர்ட் போப்.**

# “அனுதினமும் ஜெபமாலை சொல்லி வாருங்கள்!”

**"உலகிற்கு சமாதானத்தைப் பெற்றுக்கொள்ளவும், யுத்தம் முடிவடையவும், ஒவ்வொரு நாளும் ஜெபமாலை சொல்லுங்கள்"**

**(பாத்திமாவில் தேவதாய் கூறியது, 1917 மே 13).**

*எல்லா நல்ல உள்ளம் கொண்ட ஆன்மாக்களும் ஒவ்வொரு நாளும் ஜெபமாலை சொல்ல முடியும். அதனைச் சொல்லி வர வேண்டும். அவர்கள் ஒரு தேவாலயத்தில் அங்கே திவ்ய நற்கருணை எழுந்தேற்றம் செய்யப்பட்டிருந்தாலோ, அல்லது பேழையில் இருந்தாலோ, அங்கே ஜெபமாலை ஜெபிக்க முடியும். இத்தகைய ஆன்மாக்கள் குடும்பத்தினருடனோ, தனியாகவோ அல்லது பயணம் செய்து கொண்டிருக்கும்போதோ கூட ஜெபமாலை ஜெபிக்க முடியும். ஜெபமாலை ஜெபம் ஏழையோ, செல்வந்தரோ, கற்றவரோ, கல்லாதவரோ அனைவருக்கும் ஏற்புடையதாக இருக்கிறது. அது ஒவ்வொருவருடைய அன்றாட ஞான உணவு போன்று இருக்க வேண்டும். ஜெபமாலையின் ஒவ்வொரு 10 மணிகளிலும் நாம் தியானிக்கும் தேவ இரகசியங்களின் வழியாக நமது ஆன்மா வளமையடைகிறது,* **விசுவாசம், நம்பிக்கை, தேவ சிநேகத்தில்** *வளருகிறது.*



**"ஒவ்வொரு நாளும் ஜெபமாலை சொல்ல வேண்டும்..."**

**(1917 ஜூன் 13-ல் தேவதாய் கூறியது)**

*ஒவ்வொரு நாளும் ஜெபிக்க அவசியமுள்ள, கடமைப்பட்டுள்ள நாம் அனைவரும் ஜெபமாலையைச் சொல்ல வேண்டும். நாம் தவம் செய்யும் அவசியத்தில் இருக்கிறோம். அதற்காக தினசரி ஜெபமாலை ஜெபிக்கும் சிறு ஒறுத்தலை நாம் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கலாம். ஜெபமாலை ஜெபிக்கும்போது, நமது இந்த ஒறுத்தல்களை "பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே... எங்களுக்குத் தின்மை செய்தவர்களை நாங்கள் பொறுப்பது போல, எங்கள் பாவங்களைப் பொறுத்தருளும்," "அர்ச். மரியாயே, சர்வேசுரனுடைய மாதாவே, பாவிகளாயிருக்கிற எங்களுக்காக இப்பொழுதும் எங்கள் மரண நேரத்திலும் வேண்டிக்கொள்ளும்" என்ற மன்றாட்டுக்களோடு சேர்த்து பிதாவுக்கு ஒப்புக்கொடுக்கிறோம்.*

*"உலகிற்கு சமாதானத்தைப் பெற்றுக் கொள்ளவும், யுத்தம் முடிவடையவும் தேவ தாயின் மகிமைக்காக ஜெபமாலையைத் தினமும் தொடர்ந்து சொல்லி வாருங்கள்" (1917 ஜூலை 13).*

*நமதன்னை நாம் ஜெபத்தில் நிலைத்திருக்கும்படி கேட்கிறார்கள். அதனை வலியுறுத்துகிறார்கள். ஒருநாள் மட்டும் ஜெபித்தால் போதாது. நாம் எப்போதும், ஒவ்வொரு நாளும் விசுவாசத்துடனும், நம்பிக்கையுடனும் ஜெபிக்க வேண்டும். நாம் ஒவ்வொரு நாளும் செய்யும் தீமைகளை சர்வேசுரன் மன்னிக்கும்படியாகவும், நாம் பாவம் செய்யாமல் இருக்க நமக்கு உதவும்படியாகவும் கேட்க வேண்டும். அதற்கு நாம் ஒவ்வொரு நாளும் ஜெபமாலை ஜெபிக்க வேண்டும்.*

## "ஜெபமாலையை ஒவ்வொரு நாளும் தொடர்ந்து சொல்லி வாருங்கள்..."

*(1917 ஆகஸ்ட் 19).*

நமதன்னை தினமும் ஜெபமாலை ஜெபிக்கக் கேட்கிறார்கள். ஏனெனில் நன்மை செய்வதில் நாம் எவ்வளவு நிலைதடுமாறுபவர்களாக இருக்கிறோம், நாம் எவ்வளவு பலவீனர்கள், நாம் எவ்வளவு தேவையில் இருக்கிறோம் என்பதை அவர்கள் அறிவார்கள். ஒரு தாயைப் போல, நமது மோட்சத்தை நோக்கிய பாதையில் நாம் காப்பாற்றப்பட, நமது பலவீனத்தில் நம்மைத் தாங்கும்படி, நம்மைக் கைதூக்கி விடுவதற்காக அவர்கள் நம்மை நோக்கி வருகிறார்கள். நாம் செல்லும் பாதை ஜெபத்தின் பாதை; அங்கே நாம் சர்வேசுரனைச் சந்திப்போம். ஆகையால்தான் தேவதாய் ஜெபமாலையின் ஒவ்வொரு பத்து மணி ஜெபத்திற்கும் பிறகு "ஓ என் சேசுவே, எங்கள் பாவங்களை மன்னியும். நரக நெருப்பிலிருந்து எங்களைக் காப்பாற்றும். எல்லா ஆன்மாக்களை யும் விசேஷமாய் யார் அதிகத் தேவையில் இருக்கிறார்களோ, அவர்களையும் மோட்சத்திற்கு அழைத்தருளும்" என்று சொல்லும்படி நம்மைக் கேட்டுக்கொண்டார்கள். அதாவது நரக ஆபத்திலிருக்கிறவர்களுக்கு தேவ உதவி அவசியம்.

## "இந்தப் போர் முடிவடையும்படி தொடர்ந்து ஜெபமாலை சொல்லி வாருங்கள்..."

**(1917 செப்டம்பர் 13).**

ஒவ்வொரு நாளும் நமதன்னை ஜெபமாலையைச் சொல்லும்படி நமக்கு வலியுறுத்து வதன் மூலம் நாடுகளுக்கிடையேயும், மக்களின் மத்தியிலும், குடும்பங்களிலும், இல்லங்களிலும், மக்களின் மனச்சான்றுகளிலும், கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் இடையிலும் சமாதானமாகிய வரப்பிரசாதத்தைப் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்கள். அதற்காக ஜெபமாலையை ஜெபிப்பது அவசியம்.

சர்வேசுரனுடைய ஒளியும், வல்லமையும், வரப்பிரசாதமும் நமது ஆன்மாவையும், இருதயத்தையும் ஊடுருவும்போதுதான் நாம் உண்மையிலேயே ஒருவர் ஒருவரைப் புரிந்து கொள்வதிலும் மன்னிப்பதிலும், ஒருவருக்கொருவர் உதவுவதிலும் நிலைத்திருப்போம். ஆகையினால்தான் உண்மையான, நியாயமான சமாதானத்தை அடைந்து கொள்வதற்கான வழியாக - உபாயமாக ஜெபமாலை ஜெபம் திகழ்கிறது. ஆகையால் ஜெபமாலை ஜெபிப்பது மிகவும் அவசியமாகிறது.

## "ஒவ்வொரு நாளும் ஜெபமாலை சொல்லி வர வேண்டும் என்று விரும்புகிறேன்..."

**(1917 அக்டோபர் 13-ல் பாத்திமா அன்னை கூறியது.)**

ஜெபமாலை, ஒவ்வொரு நாளும் நம்மைச் சர்வேசுரனோடு நெருங்கச் செய்யும் விளைவைக் கொண்டுள்ளது. இது மரியாயின் ஜெபமாக மட்டுமல்லாமல், வேதாகமம் மற்றும் திவ்ய நற்கருணையைச் சார்ந்த ஜெபமாக, மகா பரிசுத்த தமதிரித்துவ தேவனுக்குச் சொல்லுகிற ஜெபமாகவும் திகழ்கிறது.

ஒவ்வொரு 10 மணி முடிவிலும், "பிதாவுக்கும் சுதனுக்கும் இஸ்பிரீத்துசாந்துவுக்கும் மகிமை உண்டாவதாக" என்று சொல்கிறோம். நாம் பிதாவை நம்பிக்கையுடன் மன்றாடுவதற்கு கிறீஸ்துநாதர் "பரலோக" மந்திரத்தைக் கற்றுத் தந்தார். ஜெபமாலையில், "அருள் நிறைந்த மரியாயே வாழ்க..." என்று சொல்கிறோம். இது புகழ்ச்சியின் ஜெபமாகவும், அதே சமயம்,

மரியாயின் மத்தியஸ்தத்தின் வழியாக சர்வேசுரனிடத்தில் மன்றாடும் ஜெபமாகவும் திகழ்கிறது. "அருள் நிறைந்த மரியாயே வாழ்க! கர்த்தர் உம்முடனே. பெண்களுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவர் நீரே. உம்முடைய திருவயிற்றின் கனியாகிய சேசுவும் ஆசீர்வதிக்கப்பட்டவரே" என்று ஜெபிக்கிறோம். ஆகவே நமது மீட்பின் இரகசியங்களில் நாம் மாமரியை வாழ்த்துகிறோம். ஜெபமாலை தேவ இரகசியங்களில் மாதாவில் சர்வேசுரன் கர்ப்பமாக உறைகிறதையும், இதனால் மாமரி கடவுளின் தாயாக, திருச்சபையின் தாயாக, அனைத்து மனிதர்களின் தாயாராக இருக்கிறார்கள் என்ற உண்மையையும் நிலைநாட்டுகிறது.

ஆகையினால்தான் கன்னிமாமரி பிதாவாகிய சர்வேசுரன் அவரது வார்த்தையாகிய சுதனாகிய சர்வேசுரனோடு உறையும் - தங்கியிருக்கும் - உயிருள்ள முதல் திவ்ய நற்கருணைப் பேழையாகவும் இருக்கிறார்கள்.

அவர்களே நமது ஆராதனைக்காகவும், அன்புக்காகவும், சர்வேசுரன் எப்போதும் தங்கி தம்மை வெளிப்படுத்துகிற முதல் கதிர்ப்பாத்திரமாகவும், முதல் பீடமாகவும் திகழ்கிறார்கள்..." என்று சகோதரி லூசியா கூறுகிறாள்.

மரியாயே வாழ்க!

## மரியாயே வாழ்க!

மாமரியின்மீது நாம் கொள்ளும் பக்தி ஞான வாழ்வை ஓர் இனிமையான வாழ்வாக மாற்றுகிறது. சிறிது சிறிதாக நம் இருதயத்தைக் கனிவுள்ளதாகவும், நம்பிக்கை நிறைந்ததாகவும் மாற்றுகிறது. துயரங்களை மகிழ்ச்சியோடும், பக்தியோடும் ஏற்றுக்கொள்வதும், சோதனை களைத் திட தைரியத்தோடு எதிர்த்து வெல்லுவதுமான மனநிலையை மாதா பக்தி நமக்குத் தருகிறது.

அம்மா மரியாயே! உமக்கு நான் மிகவும் கடன்பட்டிருக்கிறேன். தாயே, உம்மை நேசிக்கிறேன். எப்பொழுதும் உமக்கு நன்றியுள்ளவனாக இருப்பேன். எப்பொழுதும் உம்மை நேசிப்பேன். இது வரை நான் காட்டிய உதாசீனத்தை மன்னியுங்கள், அம்மா.

மாமரியை நேசிப்போர் இரட்சணியத்தின் பாதையில் செல்கின்றனர். மாதாவின் அன்பைப் புறக்கணிப்போர், ஒருவேளை அவர்கள் புதுமை செய்யும் ஆற்றலைப் பெற்றுக் கொண்டவர்களாயினும் சரி, அவர்களை நாம் நம்பக் கூடாது. மாமரியிடம் உண்மையான பக்தி கொண்டிருப்போர் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. மாமரியை உண்மையில் நேசிப் போர் அத்தாயின் மேற்போர்வையின் நேசப் பாதுகாவலில் இருக்கின்றனர். சாத்தான் அவர்களை மாமரியிடம் இருந்து பிரிக்க முயன்றால், மாமரி தனது மேற்போர்வையைக் கொண்டு அந்த ஆத்துமங்களை இன்னும் நன்றாக மூடி, அவர்களைக் காப்பாற்றுகிறார்கள்.

மாமரியின் அடிமைகள் அனைத்து காரியங்களிலும், மகிழ்ச்சியுடனும், எளிதாகவும், அமைந்த மனதோடும் கீழ்ப்படிகிறார்கள். ஆண்டவர் மட்டில் பிள்ளைகளுக்குரிய அன்புடன் நடந்துகொள்ளும் வரத்தை மாமரி தன் பிள்ளைகளும், அன்பின் அடிமைகளுமாகிய நமக்குப் பெற்றுத் தருகிறார்கள். மாமரி மிக மிக மோசமான மனிதர்களுடனும் கூட பரிவன்போடும், இரக்கத்துடனும் நடந்துகொள்கிறார்கள். காரணம், மாமரி தனது தாயன்பினால் அவர்களைப் போர்த்தி, அவர்களுக்குத் தெரியாமலேயே தன் அடையாளமான தாழ்ச்சியையும், ஈடு இணை யற்ற தன்மையையும் அவர்களுடைய இரத்தத்தில் சேர்த்து விடுகிறார்கள் - **முத்திப்பேறு பெற்ற எட்வர்ட் போப்.**

# அர்ச். மிக்கேல் அதிதூதர்

அதிதூதரான அர்ச். மிக்கேல் உரோமைக் கத்தோலிக்கப் பாரம்பரியத்தில் சகல சம்மனசுக்களிலும் மிக முக்கியமான இடத்தை வகிக்கிறார். அதிதூதர் என்று அழைக்கப்பட்டாலும், இவர் கடவுளின் திருச்சன்னதியில் நிற்கிற உரியேல், ராகுவேல், இரஃபாயேல், ஸாரியேல், கபிரியேல். ரெமியேல் என்னும் ஆறு பக்திச்சுவாலக சம்மனசுக்களோடு தாமும் சேர்ந்து, கடவுளின் திருமுன் நிற்கும் ஏழு தேவதூதர்களில் (தோபி. 12:15) ஒருவராக இருக்கிறார்.



பண்டைய யூத நூல்களிலும், குறிப்பாக, கி.மு. மூன்றாம் மற்றும் இரண்டாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த நூல்களிலும் அர்ச். மிக்கேல் அதிதூதர் பல முறை குறிப்பிடப்படுகிறார். இந்த புராதனமான ஆவணங்களில் அவர் நவ விலாச சம்மனசுக்கள் அனைவருக்கும் தலைவராகவும், இஸ்ராயேல் மக்களினத்தை ஆதரித்துப் பாதுகாத்து வரும் பொறுப்பைக் கடவுளிடமிருந்து பெற்றிருப்பவராகவும் சித்தரித்துக் காட்டப்படுகிறார்.

## விசுவாசத்தின் பாதுகாவலர்

விசுவாசத்தின் பாதுகாவலராகவும், தீமைக்கு எதிரான போர்வீரராகவும் அர்ச். மிக்கேல் சம்மனசானவரின் பங்கு புதிய ஏற்பாட்டில், குறிப்பாக, காட்சியாகமத்தில் உயிரோட்டமுள்ள முறையில் சித்தரித்துக் காட்டபடுகிறது: "அன்றியும் வானத்திலே ஒரு பெரிய யுத்தம் உண்டாயிற்று. மிக்காயேலும் அவருடைய தூதர்களும் பறவை நாகத்தோடே யுத்தஞ் செய்தார்கள். பறவை நாகமும் அவனுடைய தூதர்களும் யுத்தஞ் செய்தார்கள். அவர்கள் ஜெயங் கொள்ளவும் இல்லை, வானத்திலே அவர்களிருந்த இடம் அதுமுதல் காணப்படவும் இல்லை. அப்படியே ஆதி சர்ப்பமாகிய அந்தப் பெரிய பறவை நாகம் வெளியே தள்ளப்பட்டது. அதற்குப் பேய் என்றும், சாத்தான் என்றும் பெயர். அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது. அத்தோடேகூட அதன் தூதர்களும் தள்ளப்பட்டார்கள்."

இவ்வாறு, கடவுளின் மனிதாவதாரத்திற்கு ஊழியம் செய்ய வேண்டுமென சம்மனசுக்களுக்கு விதிக்கப்பட்ட தேவ கட்டளையை எதிர்த்துக் கலகம் செய்த சாத்தானையும், அவனது தூதர்களையும் தேவ வல்லமையின் பலத்தால் பரலோகத்தினின்று வெளியேற்றி, நரகத்தில் விழச் செய்தவராகக் குறித்துக் காட்டப்படும் அதிதூதரான அர்ச். மிக்கேல், கடவுளுக்கு முன்பாக சாத்தான் மனிதர்களைக் குற்றஞ்சாட்டுவதைத் தடுக்கும் பொறுப்பையும் கடவுளிடமிருந்து ஏற்றிருக்கிறார். தேவ கட்டளைகளை முறையாய் அனுசரித்து, கடவுளுக்கு ஆராதனையும், தேவ மாதாவுக்கு மேலான வணக்கமும், தமக்கும், சகல தேவதூதர்கள், அர்ச்சியசிஷ்டவர்களுக்கும் வணக்கமும் செலுத்தி வருகிற கடவுளின் மக்களும், சேசுவோடு கடவுளின் உடன் வாரிசுகளுமான கத்தோலிக்க விசுவாசிகளைப் பாதுகாக்கும் பொறுப்பு அவரிடமே விசேஷமாக ஒப்படைக்கப்பட்டுள்ளது.

## அதிதூதர் வகிக்கும் பொறுப்புகள்

கத்தோலிக்க போதனையின்படி அதிதூதரான அர்ச். மிக்கேல் சம்மனசானவர் நான்கு முக்கியப் பொறுப்புகளை வகிக்கிறார். அவை: **கடவுளின் தளகர்த்தர், மரண தூதர், ஆத்துமங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பவர் மற்றும் திருச்சபையின் பாதுகாவலர்** ஆகியவையாகும்.

**கடவுளின் தளகர்த்தர்**: இவரே இருளின் சக்திகளுக்கு எதிரான போரில் பரலோக சேனைக்குத் தலைமை வகிக்கிறார். நன்மைக்கும், தீமைக்கும் இடையில் தொடர்ந்து நிகழ்ந்து வரும் போராட்டத்தைப் பிரதிபலிக்கும் ஞானப் போராட்டத்தின் மாதிரிகையாகவும் இவர் செயல்படுகிறார்;

**மரண தூதர்**: அர்ச். மிக்கேல் மரித்த நல்ல கத்தோலிக்கர்களின் ஆத்துமங்களை மோட்சத்திற்கு அழைத்துச் செல்கிறார். மரண சமயத்தில், நித்திய மீட்புப் பெறுவதற்கான ஒரு வாய்ப்பை அவர் ஆத்துமங்களுக்குப் பெற்றுத் தருகிறார். ஆத்துமங்களின் மீது உரிமை பாராட்டியபடி, அவற்றை அடிமைப்படுத்தி நரகத்திற்கு இழுத்துச் செல்ல முயலும் பசாசின் முயற்சிகளை முறியடித்து, ஆத்துமங்களை ஆதரித்துக் காப்பாற்றுகிறார்.

**ஆத்துமங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பவர்:** அவர் தராசு ஒன்றை ஏந்தியிருப்பவராக அடிக்கடி சித்தரிக்கப்படுகிறார். இவ்வாறு பொதுத் தீர்வையின்போது, திவ்ய நடுவரின் வலப் பக்கமும், இடப்பக்கமும் ஆத்துமங்களைப் பிரித்து நிறுத்தும் அவருடைய பொறுப்பு சுட்டிக்காட்டப்படுகிறது. இவ்வாறு மனுக்குலம் நித்திய தீர்ப்புக்குள்ளாவதில் அவருடைய பங்கு வெளிப்படுத்தப்படுகிறது.

**திருச்சபையின் பாதுகாவலர்:** தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் பாதுகாவலர் இவரே. திருச்சபையின் பல்வேறு கால கட்டங்களில் அதைப் பாதுகாத்து வந்தவர் என்றும், பல நகரங்களுடையவும், நாடுகளுடையவும் பாதுகாவலர் என்றும் இவர் மதிக்கப்படுகிறார். 1884, அக்டோபர் 13 அன்று, சாத்தான் திருச்சபையை அழிக்க முயலவும், தனக்குத் தங்களை அர்ப்பணிப்பவர்களின் ஆத்துமங்களின் மீது முழுமையான அதிகாரத்தையும் சேசுவிடமிருந்து பெற்றுக்கொண்டதைக் "கண்ட" பாப்பரசர் 13ஆம் சிங்கராயர், உடனே திருச்சபையை அதன் பாதுகாவலரான அர்ச். மிக்கேல் அதிதூதருக்கு மீண்டும் அர்ப்பணித்து, "அதிதூதரான அர்ச். மிக்கேலே, எங்கள் போராட்டத்தில் எங்களைத் தற்காத்தருளும்..." என்று தொடங்கும் ஜெபத்தை எழுதி, அது திவ்ய பலிபூசையின் முடிவில் சொல்லப்படவும், விசுவாசிகள் அடிக்கடி அதை ஜெபிக்கவும் உத்தரவிட்டார்.

கி.பி. 490, மே 8 அன்று, அர்ச். லாரென்ஸ் மாய்யோரானுஸ் என்ற பரிசுத்த ஆயர் கார்கானோ குன்றின்மீதிருந்த பழைய மேற்றிராசன ஆலயத்தில் ஜெபித்துக்கொண்டிருந்தபோது, பரலோக சேனைகளின் இளவரசர் அவருக்குத் தோன்றி, "நான் அதிதூதரான மிக்கேல். நான் எப்போதும் கடவுளின் பிரசன்னத்தில் இருக்கிறேன். இந்த இடத்தில் தங்கி வசிக்கவும், அதைக் காவல் காக்கவும், ஓர் அடையாளத்தின் மூலம் நானே அதன் வாயிற்காவலராகவும், பாதுகாவலராகவும் இருக்கிறேன் என்பதை நிரூபிக்கவும் நான் இங்கே வந்திருக்கிறேன்" என்றார். இதன்பின் இங்கே நிகழ்ந்த பல அற்புதங்களின் மூலம் அவர் தம் வார்த்தையை எண்பித்தார். அப்போது முதல், கார்கானோ குன்று, அர்ச். மிக்கேல் அதிதூதரின் வல்லமை விளங்கும் திருத்தலமாக விளங்கி வருகிறது.

இவ்வாறு அதிதூதர் நம் உரோமைக் கத்தோலிக்கப் பாரம்பரியத்தில், விசுவாசத்தின் பாதுகாவலராகவும், ஆத்துமங்களின் பாதுகாவலராகவும், தேவ நீதியின் அடையாளமாகவும் மிக முக்கியப் பங்கு வகிக்கிறார். நம் ஞானப் போராட்டங்கள், பசாசு நமக்கு விடுக்கும் சவால்கள் ஆகியவற்றின் மத்தியிலும், குறிப்பாக, சிலுவை சுமந்தபடி தனது கல்வாரியை நோக்கிச் செல்லும் கத்தோலிக்கத் திருச்சபையின் இன்றைய அவல நிலையில் அதன் விசுவாசத்தைப் பாதுகாக்கத் துணையாயிருக்கவும் அவரைத் தொடர்ந்து மன்றாடி வருவது நம் கடமையாகும். ஆகவே பாதுகாப்பிற்காகவும், வழிகாட்டுவதற்காகவும் அவரை நோக்கித் திரும்புவோம். "அதிதூதரான..." என்ற ஜெபம், ஒன்பது வாழ்த்துகள் அடங்கிய அர்ச். மிக்கேல் ஜெபமாலை ஆகியவை அவரது மிக முக்கியமான ஜெபங்களாகும். இவற்றை ஜெபிப்போம். பரலோக இளவரசரின் பாதுகாப்பைப் பெற்றுக்கொள்வோம்.

**திருநாள்: செப்டம்பர் 29.**

மரியாயே வாழ்க!

# ஆன்ம வாழ்விற்கு அத்தியாவசியமான வாய்ச் செபமும், மனச் செபமும்

**("உத்தமதனத்தின் பாதை"யில் அர்ச். அவிலா தெரேசம்மாள் தரும் விளக்கம்)**



*என் சகோதரிகளே!*

*நீங்கள் மனசெபம் செய்தால் வாய் மூடியே இருக்க வேண்டும் என்னும் நியதி கிடையாது. நாம் ஆண்டவரிடம் வாய்ச் செபத்தின் வழியாகப் பேசும்போது, நான் உச்சரிக்கும் வார்த்தைகளைவிட அவருடன் பேசுகிறேன் என்ற உணர்வு கூடுதலாயிருக்குமானால் நாம் மனச் செபத்தையும் வாய்ச்செபத்தையும் ஒன்றாய் இணைக்கிறோம்.*

*பரலோக மந்திரம் சொல்லும்போது கடவுளுடன் பேசுகிறோம், பேசுகிற நாம் யார், நம் நிலை என்ன என்பதைக் கருதி சரியான மேரை மரியாதையுடன் ஜெபிக்க வேண்டும் ஆண்டவர்தானே! எப்படியும் பேசலாம் என்று துணிபவன் தள்ளுண்டு போவான். தான் கேட்பதை அடைய மாட்டான். செபத்தில் அலட்சியமும் கவனமின்மையும் வராதபடி, பழக்கம் ஏற்படும் வரை ஆண்டவரிடம் பேச வேண்டியதை எழுதி வைத்துக்கொள்ளலாம். (ஜெபப் புத்தகங்கள் இருப்பது இதற்காகவே).*

*ஒரு தடவை நான் அவசரத்தினிமித்தம் ஒரு உயர்குல மாதைச் சந்திக்க வேண்டியிருந்தது. அந்த ஸ்திரீயை "அம்மணியவர்களே" என்றுதான் அழைக்க வேண்டுமாம். அந்த வார்த்தை எனக்குப் பழக்க மில்லாததால் அதை எழுதியும் தந்தார்கள். அம்மாதிடம் சென்றதும் என் மந்த புத்திக்கு ஒன்றுமே ஓடவில்லை. வார்த்தையை மாற்றிச் சொல்லி விட்டேன். பின் அந்தத் தவறையும் அவளிடமே விளக்கிக் கூறினேன். அவளோ நன்றாகச் சிரித்துவிட்டு, "எனக்கு சாதாரண மரியாதை போதும். எடுத்துக்கட்டி எதுவும் வேண்டாம்" என்றாள். நானும் அப்படியே செய்தேன். உதடுகளால் மட்டும் வார்த்தையை உச்சரித்துப் பயன் ஏதும் இல்லை. மனமும் அதனுடன் சேர்ந்திருக்க வேண்டும்.*

*என் சகோதரிகளே, நீங்கள் ஜெப வாழ்விற்கு வரும்போது அந்தப் பாதையில் உங்களுக்கு சந்தேகம் குழப்பம் எதுவும் இருக்கக் கூடாது. நீங்கள் சரியான பாதையில் முன்செல்கிறீர்கள் என்ற நிச்சயம் உங்களுக்கு இருக்க வேண்டும். அது இல்லாவிட்டால் நீங்கள் தத்தளிக்க நேரிடும். காலம் வீணாகும். ஜெபவாழ்வில் உந்நத ஆண்டவருடன், ஒன்றுமில்லாத நாம் பேசுகிறோம் என்ற தாழ்ச்சி எப்போதும் தேவை. அவர் நல்லவரும் தாழ்ச்சி உள்ளவருமாதலால் நாம் அதை ஒரு காரணமாக வைத்து அவமரியாதைகளைச் செய்துவிடக் கூடாது.* **அவருடைய தாழ்ச்சி எவ்வள வென்றால் ஒரு படிப்பறியாச் சிறுவனின் எளிமையான வேண்டுதல் பெரிய அறிஞரின் சொற்பொழிவைவிட அவருக்கு அதிக பிரியமாயிருக்கும்.**

*நாம் ஓராயிரம் வாழ்வுகள் வாழ்ந்தாலும், இந்த ஆண்டவரிடம் எப்படிப்பட்ட மரியாதை யுடன் நாம் நடந்து கொள்வது என்பதைக் கண்டுபிடிக்க மாட்டோம். அவர் முன்னிலையில் சம்மனசுக்களே நடுங்குகிறார்கள். அவர் அனைத்திற்கும் கட்டளையிடுகிறார். எல்லாவற்றையும் செய்யக்கூடிய வல்லவராயிருக்கிறார். அவர் விரும்பினால் போதும் அது நடந்து விடும்.*

*என் சகோதரிகளே! இப்படிப்பட்ட மணவாளனை நாம் கொண்டிருப்பதைப் பற்றி நாம் மகிழ்ச்சியடைய வேண்டும். எப்படிப்பட்ட மணவாளரை நாம் அடைந்திருக்கிறோம்! எப்படிப்*

பட்ட ஆச்சரியமான குணங்களைக் கொண்டவர் நம் மணவாளன்! அப்படியானால் நாம் அவருக்காக எப்படி வாழ வேண்டும்!

உலகத்திலுள்ள ஒரு பெண் தனக்கு வரப்போகிற கணவனைப் பற்றி நினைக்காமல் இருப்பாளா? அப்படியென்றால் நாம் உறுதி செய்யப்பட்டுள்ள நம் மணவாளனைப் பற்றியும் அவர் நமக்காக ஆயத்தம் செய்திருக்கிற அவருடைய இல்லத்தைப் பற்றியும் நினைக்காமல் எப்படி இருக்க முடியும்? உலகத்திலுள்ளவர்களுக்கு இப்படி நினைப்பது விலக்கப்படவில்லை யென்றால் நம் மோட்ச மணவாளரையும் அவருடைய வீட்டையும் அவருடைய தந்தை தாயையும் பற்றியெல்லாம் நாம் நினைப்பது எவ்வளவு நியாயமானது! நம் மணவாளனின் இராச்சியம் எது? அவருடன் நாம் போகும் தேசம் எப்படிப்பட்டது? அவருடைய அந்தஸ்து என்ன? அவருடைய செல்வங்கள் எவை? அவரை நான் எப்படி மகிழ்ச்சிப்படுத்த வேண்டும்? அவருடைய அந்தஸ்துக்கு ஏற்றபடி நான் என்னையே தயார் செய்ய வேண்டும்! ஒரு சாதாரண மனிதனுக்கென தெரிந்துகொள்ளப்படும் ஒரு பெண் இப்படியெல்லாம் தன்னை ஆயத்தப் படுத்தும்போது அரசருக்கெல்லாம் அரசருடைய தேவ குமாரனுக்கென தெரிந்தெடுக்கப்படுகிற நாம் எப்படிச் செய்ய வேண்டியிருக்கும்? மனிதனைவிடக் குறைந்த மரியாதையும் அன்பும் நம் தெய்வீக மணவாளனுக்குக் கொடுக்கப்பட வேண்டும்?

ஒரு உத்தம பத்தினியிடம் அவளுடைய கணவன், அவள் தன்னிடம் தவிர வேறு யாரிடமும் பேச வேண்டாம் என்று சொல்வானானால், அவள் அதைத் தன் பத்தா மீதுள்ள அன்புக்காக, அது எவ்வளவு கஷ்டமாக இருந்தாலும் பிரியத்தோடு ஏற்றுக்கொள்வாளல்லவா? இதில் அடங்கி யுள்ள கருத்து என்ன? அவளுக்குத் தன் விருப்பக் கணவனிடமே சகலமும் உள்ளது, வேறு எதுவும் அவளுக்குத் தேவை இல்லை என்பதுதானே? இது இப்படியென்றால், எல்லா நன்மையும் நிறைந்த நம் ஆன்ம பத்தாவான ஆண்டவரிடம் தவிர மற்ற யாரிடமும் உரையாடுவதும் பொழுதுபோக் கைத் தேடுவதும் நமக்கு எப்படி விருப்பமாயிருக்க முடியும்? சர்வம் சதா நா4சம் அவரிலே மூழ்கி, அவரையே சிந்தித்து, நம் ஆன்மாவில் அவருடனேயே உரையாடி எப்பொழுதும் அவர் நினை வாகவே இருப்பதல்லவா நமக்கு மகிழ்ச்சியும் சுயாதீனமுமாக இருக்கும்? ஆ! என் சகோதரிகளே! இப்படி **இடைவிடாமல் நம் ஆத்துமத்தின் ஆண்டவராகிய சேசுவை எப்பொழுதும் நினைத்திருப்பதே மனச் செபமாகும்.** அவரை வாய்ச் செபத்தால், வாயால் அழைத்துப் பேசும்போது, உங்கள் மனம் அவரை விட்டு அகலுவது எந்த வகையில் நியாயமாகும்? ஆதலால் நான் உங்களைக் கேட்டுக்கொள்வது: நீங்கள் ஆண்டவரை அல்லாத வேறு எதையும் நினைத்திருக்கும்போது தயவு செய்து அவருடன் பேசாதீர்கள். அப்படி நீங்கள் செய்தால், மனச் செபம் என்பதை நீங்கள் கண்டுபிடிக்கவில்லை. நான் போதிய தெளிவுடன் இதைக் கூறிவிட்டேன் என்று நினைக்கிறேன். இதை நடைமுறையில் செயல்படுத்த ஆண்டவரே நமக்கு அருள்வாராக! **திருநாள்: அக்டோபர் 15.**

## ஆண்டவரில்தான் நம் பலம்!

தன் பலவீனத்தையும், குறைகளையும் மட்டும் நினைவில் கொண்டுள்ளவன் எளிதில் தைரியமிழக்கிறான். அவற்றை நன்கு அறிந்திருந்தும், உமது அளவற்ற வல்லபத்திலும், எல்லை யற்ற இரக்கத்திலும், நீர் தரும் வரப்பிரசாதத்திலும் நம்பிக்கை வைப்பவன், எதையும் சாதிப் பதற்கான தைரியத்தையும் பலத்தையும் பெற்றுக்கொள்கிறான். தங்கள் சொந்தத் திட்டத் தாலும், திறனாலும், மதிநுட்பத்தாலும் சாதிக்க நினைப்பவனை விட, ஆண்டவரைத் தன் பலமாகக் கொண்டுள்ளவனே அதிகம் சாதிக்கிறான் - **முத்திப்பேறு பெற்ற எட்வர்ட் போப்.**

# தேவமாதாவுக்கு நம் பிறந்தநாள் பரிசு!

நம் பெற்றோர், பெரியோர், உறவினர்கள், நண்பர்கள் அனைவரின் பிறந்த நாட்களை நாம் விமரிசையாகக் கொண்டாடுகிறோம். அவர்களுக்குப் பிடித்தமான பரிசுகளைக் கொடுத்து அவர்களை வாழ்த்தி, மகிழ்விக்கிறோம். இவர்கள் அனைவரையும் விட, நம் அன்பிற்கும், பாசத் திற்கும் அதிகத் தகுதியானவர்கள் நம் பரிசுத்த மாதா. அவர்களுடைய பிறந்த நாளை எப்படிக் கொண்டாடப் போகிறோம்? மாதாவின் பிறந்தநாளுக்குப் பிறகு வருடம் முழுவதிலும் கூட, என்ன பரிசு கொடுத்து அவர்களை மகிழ்விக்கப் போகிறோம்?

**கண்டிப்பாகச் செய்வதாக நாம் எடுக்க வேண்டிய பிரதிக்கினைகள்:**



1. நம் பாவங்களிலிருந்து மனந்திரும்புதல்;
2. செய்த பாவங்களுக்கு மனஸ்தாபப்பட்டு, நல்ல பாவசங்கீர்த்தனம் செய்து, உரிய பரிகாரம் செய்யத் தொடங்குதல்;
3. நம் அயலாரை நேசித்தல்;
4. பத்துக் கற்பனைகளையும், திருச்சபைக் கட்டளைகளையும் தவறாமல் கடைப்பிடித்தல்;
5. ஞாயிறு முழுப் பூசை காண்பது மட்டுமின்றி, முடிந்த வரை அடிக்கடி பாவசங்கீர்த்தனம் செய்து, அடிக்கடி பூசை கண்டு, திவ்ய நன்மை உட்கொள்ளுதல்.

**மாதாவுக்கு நாம் தரும் ஞானப் பூச்செண்டின் மற்ற மலர்கள்:**

1. தினமும் தவறாமல் 53 மணி ஜெபமாலை சொல்லுதல்;
2. கார்மெல் உத்தரியம் அணிந்து, அதற்குரிய நிபந்தனைகளை நிறைவேற்றி, இவ்வாறு மாதாவின் பாதுகாவலுக்குள் தங்கியிருந்து, நரகத்தைத் தவிர்த்தல்;
3. அடிக்கடி ஜெபித்தல்; மரணம், தீர்வை, மோட்சம், நரகத்தைப் பற்றி அடிக்கடி தியானித்தல்;
4. மாதாவின் அன்புப் பிள்ளைகள் என்ற முறையில் அவர்களுடைய சகல புண்ணியங்களையும் அனுசரிக்க முயற்சி செய்தல்;
5. சேசுவின் திரு இருதய பக்தியையும், மரியாயின் மாசற்ற இருதய பக்தியையும் அவற்றின் முழு நிபந்தனைகளின்படி மிகுந்த பக்தியோடும், விருப்பத்தோடும், அன்போடும் அனுசரித்து சேசுவுக்கும், மாதாவுக்கும் ஆறுதலளித்தல், அவற்றைப் பரப்புதல்;
6. மாமரியின் அமல உற்பவம், நித்திய கன்னிமை, தெய்வீகத் தாய்மை, அவர்கள் சகல வரப் பிரசாதங்களுக்கும் மத்தியஸ்தி என்ற சத்தியம், அவர்களது மோட்ச ஆரோபணம், மாதா பரலோக பூலோக இராக்கினியாயிருக்கும்படி தமத்திரித்துவ சர்வேசுரனின் மூன்று தேவ ஆட்களோடு அவர்களுக்குள்ள பிரிக்க முடியாத உறவு, மனித இரட்சணியத்தில் திவ்ய கன்னிகை இணை இரட்சகியாயிருக்கும் மகிமை, அவர்களே ஆதியாகம ஸ்திரீயாகவும், காட்சியாகம ஸ்திரீயாகவும் இருக்கும் பரம இரகசியம் ஆகியவை பற்றி நாமும் அறிந்து, மற்றவர்களுக்கும் அறிவித்தல்;
7. 33 நாள் தயாரிப்பு செய்து, நம்மை முழுவதும் மாதாவுக்கு அன்பின் அடிமைகளாக ஒப்புக் கொடுத்தல்.

நம் நேச மாதாவுக்கு நாம் தரக்கூடிய மிகவும் பிரியத்திற்குரிய பிறந்த நாள் பரிசாகிய ஞானப் பூச்செண்டு இதுவே! **திருநாள்: செப்டம்பர் 8.** மரியாயே வாழ்க!



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



Cell: 94876 09983 Landline: 0461 2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1 | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | |
| 2 | உலகின் இறுதிக் காலங்கள் | 125.00 | |
| 3 | திருப்பாடுகளின் வரலாறு | 150.00 | |
| 4 | அனுதின ஜெபப் புத்தகம் | 50.00 | |
| 5 | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | |
| 6 | அறிவோம் பத்துக் கட்டளைகள் | 100.00 | |
| 7 | மலைமேல் பிரசங்கம் | 65.00 | |
| 8 | அறிவோம் அப்போஸ்தலர்களை: அர்ச். பிலவேந்திரர் | 90.00 | |
| 9 | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள் அடங்கியது) | 325.00 | |
| 10 | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு | 125.00 | |
| 11 | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 250.00 | |
| 12 | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | |
| 13 | பாத்திமா காட்சிகள் | 100.00 | |
| 14 | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | |
| 15 | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | 35.00 | |
| 16 | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | |
| 17 | என்னைப்படி அல்லது வருத்தப்படு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 30.00 | |
| 18 | ஞான உணர்த்துதல் | 40.00 | |
| 19 | Read Me or Rue It | 60.00 | |
| 20 | என்னைப் படிக்காவிட்டால் வருத்தப்படுவாய் | 80.00 | |
| 21 | கத்தோலிக்க வேத சத்தியங்கள் | 45.00 | |
| 22 | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | |
| 23 | ஞான சரீரம் | 35.00 | |
| 24 | சலேத் இரகசியம் | 35.00 | |
| 25 | மரியாயின் இரகசியம் | 30.00 | |
| 26 | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | |
| 27 | The Penny Catechism | 35.00 | |
| 28 | அமலோற்பவ மாமரியின் போரணி | 40.00 | |
| 29 | அன்னையை நேசிக்கப் பன்னிரு படிகள் | 30.00 | |
| 30 | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 35.00 | |
| 31 | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | |
| 32 | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | |
| 33 | வியாகுல மாதா பக்தி | 35.00 | |
| 34 | தலை வெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 20.00 | |
| 35 | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 15.00 | |
| 36 | காவல் சம்மனசானவர் | 10.00 | |
| 37 | சிலுவைப் பாதை | 15.00 | |
| 38 | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | |
| 39 | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | |
| 40 | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | |
| 41 | அர்ச். சூசையப்பர் பக்தி மாலை | 15.00 | |
| 42 | அர்ச். சூசையப்பர் மகத்துவங்கள் | 60.00 | |
| 43 | ஆதித் திருச்சபையின் பத்து வேத கலாபனைகள் | 10.00 | |
| 44 | திருச்சபையின் கட்டளைகள் (சிறிய விளக்கத்துடன்) | 10.00 | |
| 45 | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | |
| 46 | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | 10.00 | |
| 47 | தேவ அழைத்தல்கள் | 35.00 | |
| 48 | சின்னக் குறிப்பிடம் | 10.00 | |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 49 | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம் | 25.00 | |
| 50 | மனச் செபம் ஒரு விளக்கம் | 35.00 | |
| 51 | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வரலாறு) | 70.00 | |
| 52 | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு -Fr. அந்தோனி சேவியர் தொகுத்து எழுதியது | 60.00 | |
| 53 | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 100.00 | |
| 54 | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | |
| 55 | 33 நாள் தயாரிப்பு: மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | 70.00 | |
| 56 | இறுதிக் கால யுகம் | 100.00 | |
| 57 | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | |
| 58 | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | |
| 59 | வேத விளக்கம் (வீரமாமுனிவர் (சங்.ஜோசப் பெஸ்கி, சே.ச.) எழுதியது | 150.00 | |
| 60 | அன்பின் அரசர் | 150.00 | |
| 61 | நரகம் | 60.00 | |
| 62 | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 13.00 | |
| 63 | அர்ச். சிலுவை அருளப்பர் வாழ்க்கை வரலாறு | 80.00 | |
| 64 | நரக சத்தியம் | 70.00 | |
| 65 | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | |
| 66 | மரியாயின் மகிமைகள் | 170.00 | |
| 67 | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | |
| 68 | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | |
| 69 | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | |
| 70 | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | |
| 71 | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | |
| 72 | புனித தெரேசம்மாள் சரித்திரம் | 160.00 | |
| 73 | கடவுள் மனிதனின் காவியம் (முதல் பாகம்) | 350.00 | |
| 74 | கடவுள் மனிதனின் காவியம் (இரண்டாம் பாகம்) | 350.00 | |
| 75 | கடவுள் மனிதனின் காவியம் (மூன்றாம் பாகம்) | 550.00 | |
| 76 | கடவுள் மனிதனின் காவியம் (நான்காம் பாகம்) | 350.00 | |
| 77 | கடவுள் மனிதனின் காவியம் (ஐந்தாம் பாகம்) | 350.00 | |
| 78 | கடவுள் மனிதனின் காவியம் (ஆறாம் பாகம்) | 350.00 | |
| 79 | கடவுள் மனிதனின் காவியம் (ஏழாம் பாகம்) | 550.00 | |
| 80 | கடவுள் மனிதனின் காவியம் (எட்டாம் பாகம்) | 550.00 | |
| 81 | கடவுள் மனிதனின் காவியம் (ஒன்பதாம் பாகம்) | 550.00 | |
| 82 | கடவுள் மனிதனின் காவியம் (பத்தாம் பாகம்) | 550.00 | |

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து, நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா ரூ. 150/- கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உங்கள் ஆன்ம சரீர நன்மைகளுக்காக தினமும் எங்கள் ஜெபங்களில் வேண்டிக்கொள்கிறோம். பத்திரிகையைப் பரப்ப விரும்புகிறவர்களுக்குக் கூடுதல் பிரதிகள் இலவசமாக அனுப்பப்படும்.
2. மாதா பரிகார மலர் சந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் **9487609983** என்ற எண்ணுக்கு **Google Pay** செய்யும்படி கேட்டுக்கொள்கிறோம்.

A/c Name: SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code: SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch, Tuticorin.

**அனுப்ப வேண்டிய முகவரி**

**மாதா அப்போஸ்தலர்கள் சபை, ரோஸா மிஸ்திக்கா,**
**11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி. பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628 002.**
**போன் : 0461 2361989, அலைபேசி: 94876 09983. Email: tutirosamystica@gmail.com**
**சந்தா நன்கொடை செலுத்த: Google Pay: 94876 09983.**

**நமது மாதா அப்போஸ்தலர்கள் சபைக்கு அனுப்பும் நன்கொடை மற்றும் காணிக்கைக்கு வரிச் சலுகை பெற்றுக்கொள்ள ரசீது (80G - AAJTS6976JF20215) பெற்றுக்கொள்ள முடியும்.**

சேசு மரியாயில் அன்புள்ள நண்பர்களே, உபகாரிகளே,

நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலய கட்டட வேலைகள் கடந்த ஆறு ஆண்டுகளாக நடந்து வருகின்றன. சேசுவின் திரு இருதயத்திற்கும் (திவ்ய நற்கருணைக்கும்), மேலும், தேவ மாதா பாத்திமாவில் கேட்டுக்கொண்டபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்திக்கென்றும் இந்த ஆலயத்தை மிகுந்த முயற்சியுடன், உபகாரிகளின் உதவியினால் கட்டி வருகிறோம். தேவையான உதவிகள் கிடைக்காமையால் இக்கட்டட வேலைகள் இன்னும் முடியவில்லை. நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலயத்தை முழுமையாகக் கட்டி முடிக்க கீழ்க்கண்ட வகைகள் தேவைப்படுகின்றன:

| | | |
|---|---|---|
| 01. | ரூஃப் (Roof) & கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 30,00,000.00 |
| 02. | பீடத்தின் மேல் (Center) டவர் கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 9,00,000.00 |
| 03 | ஆலயத்தின் உள்பக்கம் & வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & கூலி | ரூ. 10,00,000.00 |
| 04. | ரூஃப் மேல் பக்கம் & உள்பக்கம் பூசுவதற்குப் பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 12,50,000.00 |
| 05. | கூரை ஓடு பதிக்கப் பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 7,00,000.00 |
| 06. | ஆலயத்தின் முன் கோபுரம் (Front Tower) கட்டுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 7,50,000.00 |
| 07. | குருக்கள் தங்கும் இல்லத்திற்கு உள்பக்கம், வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 1, 05,000.00 |
| 08. | தேக்கு மரம் நிலை & கதவு 9, ஜன்னல் 14, லேபர் & வுட் பாலிஷ் | ரூ. 17,50,000.00 |
| 09. | தரைக்கு வெள்ளை மார்பிள் கல் & லேபர் கூலி | ரூ. 24,00,000.00 |
| 10. | எலெக்ட்ரிக்கல் சாமான்கள், (Fittings)விளக்குகள் & லேபர் கூலி | ரூ. 6,00,000.00 |
| 11. | ஆலயம் முழுவதற்கும் வர்ணம் பூச பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 12,00,000.00 |
| 12. | கண்ணாடி ஓவியங்கள் வேலை | ரூ. 9,00,000.00 |
| 13. | திவ்ய பலிபூசை நிறைவேற்ற முக்கிய பீடம் (தேக்கு மர வேலை) | ரூ. 9,25,000.00 |
| 14. | பீடத்தின் இரு புறமும் (Altar Sides) தேக்கு மர வேலை | ரூ. 7,00,000.00 |
| | ஆலயம் கட்டி முடிக்கத் தேவையான மொத்தத் தொகை | ரூ.1,61,80,000.00 |

இந்த ஆலயத்தைக் கட்டி முடிக்க மாதாவின் அன்புப் பிள்ளைகள் தங்களால் முடிந்த உதவி அளிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**வங்கி விபரம்:**

**A/c Name : Society of Apostles of Mary**
**A/c No. : 121802000000473**
**IFS Code : IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappillaiyurani Branch,**
**Thoothukudi.**
**For Tax exemption: 80G - AAJTS6976JF20215**

இவண்,
மாதா அப்போஸ்தலர்கள் சபை மற்றும்
மாதா அப்போஸ்தலர்கள்

முகவரி:
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
11 / 519, சகாயமாதா பட்டணம், 2-வது தெரு,
தூத்துக்குடி - 628 002. போன்: 0461 2361989
அலைபேசி: 94876 09983 / 94872 57479
Email: tutirosamystica@gmail.com

# உலக ஜெயராக்கினி மாதா ஆலயம்



ஆலயத்தின் முழுத்தோற்றம்



கட்டிடப் பணி நடைபெறும் ஆலயத்தின் தோற்றம்

**முகவரி**

மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
11/519, சகாயமாதாபட்டணம்,
2வது தெரு, தூத்துக்குடி – 628 002.
தொலைபேசி: 0461 2361989
அலைபேசி: 94876 09983, 94872 57479
E-mail: tutirosamystica@gmail.com

**வங்கி விபரம்**

Account Name:
Society of Apostles of Mary
Account No. 121802000000473
IFS Code: IOBA0001218
Indian Overseas Bank,
Mappillaiyurani Branch,
Thoothukudi.

Google Pay: 94876 09983 Avail 80G for Tax Exemption - AAJTS6976JF20215



## செப்டம்பர் & அக்டோபர் மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துக்கள்

**செப்டம்பர் :** தேவமாதா நித்திய கன்னிகை என்ற சத்தியத்தை மறுக்கும் நிந்தைக்குப் பரிகாரமாக ...

**அக்டோபர்:** தேவமாதாவினுடைய பக்தியை இளம் உள்ளங்களிலிருந்து அகற்றுகின்ற துரோகத்துக்குப் பரிகாரமாக ...

மாதா பரிகார மலரில் விசுவாசத்திற்கோ, நல்லொழுக்கத்திற்கோ, கத்தோலிக்க திருச்சபைக்கோ அதன் போதனைகளுக்கோ உண்மையான பக்திக்கோ மாறுபாடான எந்தக் கருத்தும் வெளிவராது.

– மாதா பரிகார மலர் குழு


**MATHA PARIKARA MALAR**
ROSA MYSTICA
(Opp. V.V.D. H. Sec. School)
SAHAYAMATHAPATTANAM
TUTICORIN - 628 002.
PH: 0461 - 2361989
Cell: 94876 09983
E-mail: tutirosamystica@gmail.com

**மாதா பரிகார மலர்**
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் - 628 002
போன்: 0461 - 2361989
அலைபேசி: 94876 09983


To


Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy , Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.

Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Editor: Sammanasu Navis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.